# 'விஷமத்தனமான வேலை!' — எஸ்.எஸ்.ஆர்.



நான் ஏதோ சுந்தரராஜனைப் பற்றிச் சொன்னதாகவும் அதற்கு அவர் சூடான பதிலைச் சொன்னதாகவும் முதல் இரண்டு பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளது. (கல்கி8.4.84) அதைப் படித்து எனக்குச் சங்கடமாகவும் சஞ்சலமாகவும் இருந்தது.

சில மாதங்களுக்கு முன்பு தென்னிந்திய நடிகர் சங்கப் பேரவைக் கூட்டத்தில் சுந்தர்ராஜன் நடிகர்களுக்கு விரோதமாகச் செயல்படுகிறார். ஆகவே சங்கத்தின் அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் அவரை விலக்கிவிட வேண்டும் என்று திடீரென ஒரு நடிகர் தீர்மானம் கொண்டு வந்தார். கூடியிருந்த சங்க அங்கத்தினர்கள் அத்தனை பேரும் பலத்த கரகோஷம் செய்து தீர்மானத்தை ஒருமனதாக நிறைவேற்றி விட்டார்கள். ஒருவர் கூட எதிர்க்கவில்லை. நான் உண்மையில சங்கடப்பட்டேன். 'தீர்மானம்நிறைவேறிவிட்டது ஏகமனதாக. இருந்தாலும் நடவடிக்கை எடுக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்துவிடுங்கள். அவசரப்பட வேண்டாம். இதைக் கேள்விப்பட்ட பிறகாவது அவரது போக்கில் மாற்றம் ஏற்படுமா எனப் பார்ப்போம். மேலும் அவர் போக்கில் மாறுதல் இல்லையென்றால் நானே நடவடிக்கைஎடுக்கத் தயங்க மாட்டேன்' என அவையினரைக் கேட்டுக் கொண்டேன். பேரவையும் ஒத்துக் கொண்டு, அந்தப் பொறுப்பை எனக்கு வழங்கியது. இவையெல்லாம் சங்க மினிட் புத்தகத்தில் அப்போதே எழுதப்பட்டுள்ளது. ஆனால் அவருடைய நடவடிக்கைகளில் மாற்றம் ஏற்படவில்லை. வேகமே இருந்தது. பல சங்கஉறுப்பினர்கள் நேரிலும், கடித வாயிலாகவும் கேட்டுக் கொண்டதற்கிணங்க மேஜர் சுந்தரராஜனைத் தென்னிந்திய நடிகர் சங்கத்தின் அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் நீக்கி விட்டதாகக் கடிதம் எழுதினேன். அவரும் பெற்றுக் கொண்டதாகப் பதில் எழுதியுள்ளார்.

இவ்வளவுக்கும் பிறகு, தென்னிந்திய நடிகர் சங்கத்தைச் சம்பந்தப்படுத்தி, சுந்தரராஜனைப் பற்றிக் கல்கி பத்திரிகைக்கு கருத்து சொல்லவேண்டிய அவசியம் எனக்கென்ன வந்தது?

இது யாரோ விஷமத்தனமான, சுந்தரராஜனுக்கு வேண்டியவர்கள் செய்திருக்கின்ற வேலை என்று ஏன் நான் கருதக் கூடாது? (கண்டுபிடிப்பது உங்களுடைய வேலை.)

சென்னை—9.
எஸ். எஸ். இராஜேந்திரன்

[திருபார்கன் பிரியன், மௌலி முதலில் எஸ். எஸ். ஆரிடம் பேசினார்கள். பின்னர் மேஜரைச் சந்தித்தார்கள். எஸ். எஸ். ஆர். கூறியவற்றுக்கு மேஜர் அளித்த பதில்களை இணைத்துக் கட்டுரையாக்கித் தந்தார்கள். 'இதில் எங்கள் கற்பனையோ விஷமத்தனமோ ஏதுமில்லை'' என்று உறுதியாகக் கூறுகிறார்கள். —ஆசிரியர்.]

---




அரும்பெரும் காரியங்களைச் சாதிக்கக் கூடியவர்களுக்குத் தான் எந்தச்சூழ்நிலையிலும் அமைதி காக்கவும் முடியும்.

சுதந்திரப் போராட்டத்தின்போது நள்ளிரவில் போலீசார் திலகரை வீட்டுக்கு வந்து கைது செய்தார்கள். அவருக்கு யமனாக வரவிருந்த தீவாந்தர சிட்சை அவருக்குக் காத்திருந்தது.

போலீசார் அவரை வண்டியில் ஏற்றிக் கொண்டு கிளம்பினார்கள். வண்டி தெரு திரும்பியிருக்காது. திலகர் நிம்மதியாக உறங்க ஆரம்பித்துவிட்டார்.

—ப. கந்தசாமி.

அலசல்

# எதிர்க்கட்சிகள் மாநாடு எதற்கு ?

**உபதேர்தல்களை முன்னிட்டுத் தமிழகத்தில் எதிர்க் கட்சிகள் மாநாடு ஒத்திப் போடப்பட்டுள்ளது. இருப்பினும் அதன் முக்கியத்துவம் குறைந்துவிடவில்லை என்றும் என்றைக்கு அதற்கு முக்கியத்துவம் இருந்தது என்றும் பல்வேறு கட்சித் தலைவர்கள் வாதிடுகின்றனர். நன்கு சிந்தித்துச் சரியான முடிவுக்கு வரவேண்டியது வாக்காளர் கடமை.**



✖ சிந்தன்

**திரு. சிந்தன்** மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி:

இன்றைக்கு நாட்டின் நிலைமை என்ன? லஞ்ச ஊழல் தலைவிரித்து ஆடுகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் தீர்ந்தபாடில்லை. விலைவாசி ஏறிக்கொண்டே போகிறதே தவிர, இறங்குவதாய்க் காணோம். ரிசர்வ் பாங்கின் அறிக்கைப்படி சென்ற ஆண்டில் மட்டும் 26,000 பெரிய, சிறிய மற்றும் நடுத்தரத்தொழில் நிறுவனங்கள் மூடுவிழா கொண்டாடியுள்ளன. இவற்றில் முடங்கியுள்ள மூலதனம் பல கோடிகள். தவிரவும் இந்தியாவைப் போல் இயற்கைச் செல்வங்கள் நிறைந்த நாடு வேறு எது? ஆனாலும் அச்செல்வங்களை நாம் முழுவதும் பயன்படுத்திக்கொள்கிறோமா என்றால், விடை எதிர்மறைதான். நாடெங்குமுள்ள அரசு நிறுவனங்களின் கொள்திறனளவில் (இன்ஸ்டால்டு கெபாஸிடி) 30 முதல் 40 சதவீதம் பயன்படுத்தப்படுகிறது. அவைகளில் லாபம் எப்படிக் கிடைக்கும்?

இத்தனை பிரச்னைகள் இருந்தாலும், இந்திரா அரசு இதைப் பற்றியெல்லாம் கவலைப்படுவதாகவே தெரியவில்லை. இதன் விளைவுதான் இந்த எதிர்க் கட்சிகள் மாநாடுகள்.

விஜயவாடாவில் நடந்த மாநாட்டில் — மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் பற்றிப் பேசப்பட்டது.

அடுத்து டெல்லியில் நடந்த மாநாட்டில் பஞ்சாப் பிரச்சினை எடுத்துக் கொள்ளப்பட்டது. அதில் இந்திரா முன்பே ஒப்புக்கொண்ட சில காரியங்களைச் செயல்படுத்தினால் பிரச்னை தீரும் என்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் அதை இந்திரா செயல்படுத்த முன் வரவில்லை. அடுத்து ஸ்ரீநகர் மாநாட்டில் மத்திய — மாநில உறவு முறைகள் பற்றி அலசப்பட்டது. முடிவில் ராணுவம், அயல் நாட்டு விவகாரம், நாணய வெளியீடு, திட்டமிடுதல் போன்ற அதிகாரங்கள் மத்திய அரசிடமும் மற்ற அதிகாரங்கள் மாநில அரசிடமும் இருந்தால் நல்லது என்று முடிவு செய்யப்பட்டது. நான்காவது கல்கத்தா மாநாட்டில் பொருளாதார பிரச்னைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. அடுத்த மாநாடு சென்னையில் நடக்க இருக்கிறது. தி. மு. க. ஏற்பாடுகளைக் கவனிக்கும். இந்த மாநாட்டில் இன்று மிக முக்கியமாய்த் தேவைப்படுகிற தேசிய ஒருமைப்பாடு பிரச்னை ஆலோசிக்கப்படும்.

சரி, எதிர்க்கட்சி மாநாடுகளில் சாதித்தது என்ன என்று கேட்பீர்கள்! நான்கு மாநாடு கூட்டி, உடனே நினைத்ததைச் சாதித்துவிட இது ஒன்றும் சாதாரண விஷயமில்லையே. நாங்கள் செய்து கொண்டிருப்பது



✖ ஏ கிருஷ்ணசாமி



✖ சௌரிராஜன்



✖ ப. உ. சண்முகம்

ஜனங்கள் நலனில் அக்கறை இல்லாத இந்திரா காங்கிரஸுக்கு ஒரு மாற்று அரசு அமைக்க வேண்டும் என்பதற்காக இல்லை. ஒரு மாற்றுக் கொள்கையும், திட்டமும் உருவாக்க வேண்டும். அதன் மூலம் மாற்று இயக்கம் உரு



வாக்க வேண்டுமென்பதற்காகத்தான் பாடுபடுகிறோம். இந்த இயக்கத்தால், மாற்று அரசைத் தர முடியுமா என்பதை எல்லாம் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை—இப்போதைக்கு.

டாக்டர் சௌரிராஜன் எம்.எல்.ஏ.(இ. காங்கிரஸ்):

''எதிர்க் கட்சிகள் டஜன் கணக்கில் ஒன்றுசேர்ந்து விஜயவாடா, டெல்லி, ஸ்ரீநகர், கல்கத்தா என்று நாலு இடங்களில் கூடிப் பேசி விட்டு, இப்போது ஐந்தாவது தடவையாகத் தமிழ்நாட்டில் — சென்னையில் மாநாடு கூட்டப்போகிறார்களாம். இதற்குக் கலைஞர் கருணாநிதி, ஏற்பாடுகளைக் கவனிக்கப் போகிறாராம்.

இந்த எதிர்க்கட்சிக்காரர்கள் என்ன காரணத்துக்காக ஒன்று சேருகிறார்கள்?. இவர்களுக்கென்று ஏதாவது பொதுவான கொள்கை இருக்கிறதா? இவர்கள் என்ன



✖ நெடுமாறன்

சாதிக்க வேண்டுமென்று நினைக்கிறார்கள்?

இவர்களால் உருப்படியாக எந்த ஒரு அடிப்படைக் கொள்கையையும் தர முடியாது. காரணம் அவர்களுக்குள் கொள்கை ரீதியாக ஓர் ஒற்றுமையும் கிடையாது. அவர்கள் ஆசையெல்லாம் ஒன்றே ஒன்றுதான். அது எப்படியாவது இந்திரா காங்கிரசைப் பதவியிலிருந்து இறக்க வேண்டும். இந்திராவைப் பதவியிலிருந்து இறக்க வேண்டும் என்பதுதான்.

இந்திரா மட்டுமில்லை, பண்டித நேருவே சொல்லியிருக்கிறார், நாட்டுக்குப் பலமுள்ள எதிர்க்கட்சி தேவை என்று. ஆனால் இன்றுள்ள எதிர்க்கட்சிகளில் இந்திரா காங்கிரஸுக்கு மாற்று அரசு தருமளவுக்கு சக்தி எதற்கு இருக்கிறது? மாற்றுக் கொள்கையுடன் மாற்று அரசு தரத் திறமையுள்ள நல்ல தலைமை வேண்டாமா? ராஜாஜி இருந்தார், காங்கிரஸைத் தமிழ் நாட்டில் பதவியிலிருந்து இறக்க முடிந்தது. ஜெயப்பிரகாஷ் நாராயணன் இருந்தார், மாற்றுத் திட்டம் மூலம் எதிர்க்கட்சிகளை ஒன்றுசேர்க்க முடிந்தது. ஆனால் ஆட்சிக்கு வந்தவர்கள் மக்கள் கொடுத்த வாய்ப்பை நல்ல விதமாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லையே?

இத்தனை அமர்க்களங்களும், தேர்தல் வரும் என்ற எதிர்பார்த்து நடந்த 'தொகுதி பேர' நடவடிக்கைகள்தான். இதற்குக்காரணம் சுயநலப் பின்னணிதான். தேர்தல் இப்போது



✖ சாதிக்பாட்சா

வராது என்று தெரிந்ததும் எதிர்க்கட்சிகள் மாநாடு கூட்டுவதிலும் சுறுசுறுப்பும் பரபரப்பும் குறைந்து விட்டது.''

ப. நெடுமாறன் (காமராஜ் காங்கிரஸ்):

பஞ்சாப் பிரச்னை பயங்கரமான வடிவம் பெற்றுள்ளது. அசாமில் குழப்பம் தீர்ந்தபாடில்லை. காஷ்மீரில் பலமான மோதல்கள். இந்தியா பூராவிலுமுள்ள பல்வேறு மாநிலங்களில் உள்ள எதிர்க்கட்சி அரசுகளைக் கவிழ்க்க இந்திரா காங்கிரசின் தீவிர முயற்சி. ஒவ்வொரு மாநிலத்திலும், மத்தியிலும் வெடித்துக் கிளம்பியுள்ள பலமான கோஷ்டிச் சண்டைகள், ஆளும் கட்சிக்குப் பலமான எதிர்க்கட்சி இல்லாத சூழ்நிலை ஆகியவற்றின் பின்னணியில் பார்த்தால் எதிர்க்கட்சிகளின் மாநாடு எத்தகைய முக்கியத்துவம் வாய்ந்தது என்பது புலனாகும்.

எதிர்க்கட்சிகள் ஒன்றை ஒன்று புரிந்து கொள்ளவும் எந்த அளவுக்குஒன்றுபட்டுச் செயலாற்ற முடியும் என்பதை உணரவும் இம் மாநாடுகள் உதவியிருக்கின்றன. மேற்கொண்டு இது வரை நடந்தவைக்குச் செயல் வடிவம் கொடுக்க முயற்சி செய்யப்படவேண்டும். அதை இனி கூட இருக்கிறமாநாடுகள்சாதிக்கலாம்.

சில கட்சிகள் சொல்வது போல் தனி மனிதர் ஒருவரை எதிர்ப்பது நோக்கமல்ல. ஆனாலும் அந்தத் தனி மனிதர் அரசையும்,



✖ சோ

நாட்டையும் குடும்பச் சொத்தாகப் பாவிக்கும் போது அவரது சொந்தக் கட்சியிலுள்ளவர்கள் கூட அதற்குத் தலைவணங்கிப் போகும் நிலைமை ஏற்பட்டு விட்ட பிறகு அதைப் பார்த்துக் கொண்டு எதிர்க்கட்சிகள் சும்மா இருக்க முடியாது. இத்தகைய தனி மனித எதேச்சாதிகாரப் போக்கை எதிர்த்துப் போராடுவதென்பது புனிதமான ஜனநாயகக் கடமையாகும். இந்தக் கடமையைச் செய்ய நாம் தவறினால் எதிர்காலச் சந்ததியினர் நம்மை மன்னிக்க மாட்டார்கள்.

ப. வு. சண்முகம்
(அ.இ.அ.தி.மு.க.):

ஆரம்பத்தில் பெங்களூரில் கூடிய தென் மாநில முதல்வர்கள் மாநாடுதான் இந்த எதிர்க்கட்சி மாநாடுகளுக்கு முன்னோடி. மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் பெற வேண்டும் என்ற ஆரம்ப நோக்கம் தற்போது திசை மாறிப்போய்க்கொண்டிருக்கிறது. ஒவ்வொரு மாநாட்டிலும் ஒவ்வொன்றுகக் கட்சிகள் விலகிக்கொண்டிருக்கின்றன. பி.ஜே.பி. சேரக் கூடாது என்று கம்யூனிஸ்டுகள் பிடிவாதமாக இருக்கிறார்கள். காஷ்மீர் மாநாடு நடந்த போது சில விளக்கங்களை எம்.ஜி.ஆர். கேட்ட போது, சரியாக விடை கிடைக்கவில்லை. கூட்டங்கள் ''இந்திரா எதிர்ப்பு'' என்ற ஒரே கொள்கையை வைத்துத்தான் நடந்து கொண்டிருக்கின்றன. நிறைய பிரச்னையில இந்த எதிர்க்கட்சிகளுக்கிடையே ஒற்றுமை இடையாது. இந்தி பிரச்சினையில் ஜனதாவுக்கும், தி.மு.க.வுக்கும் இணக்கம் எப்படி ஏற்படும்? அதே போல் இலங்கைப் பிரச்னையில் கம்யூனிஸ்டுகளுக்கும் தி.மு.க.வுக்கும் வேறுபாடுகள் உண்டு. தென்னாட்டில் மக்கள் தொடர்பில்லாத பல கட்சிகள் இந்த அணியில் இருக்கின்றன. முதல் இரண்டு கூட்டங்களில் தி.மு.க. கலந்து கொள்ளவே இல்லை. தென்னாட்டில் என்.டி. ஆரைத் தவிர வேறு சரியான ஆள் கிடைக்காததால் பிறகு கருணாநிதியைப் பிடித்திருக்கிறார்கள். கருணாநிதியும் இதுதான் வாய்ப்பு என்று சற்று விளம்பரம் தேடிக் கொள்ள இந்த எதிர்க்கட்சிகளைப் பிடித்துக் கொண்டிருக்கிறார். மக்கள் இந்த விஷயங்களைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். எதிர்கட்சிகள் மாநாடு இதுவரை எந்த பிரச்சினையிலாவது தனது முடிவான கருத்துக்களை எடுத்து வைத்திருக்கிறதா? இந்த மாநாடுகள் நடந்தால் என்ன; நடக்காமல் போனால் என்ன?

சோ (ஜனதா)'

பல்வேறு மாநிலங்களில் தற்போது எதிர்க்கட்சி அரசுகள் நடந்து வருகின்றன. மத்திய அரசின் முறையற்ற, ஒழுக்கமற்ற நோக்கங்களினால், இந்த அரசுகள் கவிழும் அபாயங்கள் இருந்து கொண்டு வருகின்றன. எதிர்க்கட்சித் தலைவர்களின் மாநாடு, மத்திய அரசை இந்த ரீதியில் செயல்பட விடாமல் தடுக்கும் என்று நம்புகிறேன். உதாரணமாக, கர்நாடக

---

# திக்குத் தெரியாத தீவினிலே!

'ராது'வுக்கு எப்போதுமே நாடக மேடையில் எதையாவது புதிதாகச் செய்தாக வேண்டும்.

சரித்திர நாடகங்களுக்கு தான் பிரம்மாண்டமான, செட்டுகளும், ட்ரிக்ஷாட்டுகளும் காண்பிக்க வேண்டுமா என்ன? 'திக்குத் தெரியாத தீவினிலே' நாடகம் மேடையில் நடக்கும் பொழுது, காட்சி அமைப்புக்கள் அமர்க்களம் மட்டுமல்ல; அலைகடல் கொந்தளிப்பு, கப்பல் சிக்கித் தத்தளிப்பது, மேலே ஹெலிகாப்டர் தேடல் — எல்லாம் கைதட்டல் வாங்குகிற அளவுக்குக் கச்சிதமாகச் செய்திருக்கிறார்.

ஒரு பத்திரிகையின் போட்டியில் வெற்றி பெற்ற ஆறு பேர், ஒரு தீவுக்குக் கப்பலில் போகிறார்கள். (நல்ல பரிசுடாப்பா!) ஆறு பேரில் ஒரே ஒரு பெண் சாந்தா. சூழ்நிலை காரணமாகச் சாந்தா அந்த ஆறு பேரில் ஒருவரை அங்கேயே கணவனாக ஏற்க நேரிடுகிறது. ஆறு பேரில் ஒருவரான ஸி.ஐ.டி. இன்ஸ்பெக்டரின் பார்வையில், தப்பி வந்த கொலைக்குற்றவாளி என்று நினைக்கப்படுகிற பிரபு. அப்புறம் பீர் முகமது, பாகவதர், பிளின்ஸ் மேன் சரவணன், ராமு, அரசியல்வாதி பொய்யாமொழி என்று தேவையான பாத்திரங்கள். சரவணன் புதை மணலில் சிக்குண்டு இறக்கவும், எல்லோர் சந்தேகப்பார்வைகளும் பிரபு மீதே செல்ல, சஸ்பென்ஸைக் கடைசி வரை சாமர்த்தியமாகக் கொண்டு செல்கிறார் 'ராது'.

ஆரம்ப அறிமுகக்காட்சியின் நீளத்தைக் குறைத்து விட்டால், இந்தச் சிறிய நாடகத்தின் நேரம் குறைந்தாலும் சுவாரசியம் குறையாது.

—சாருகேசி



## விளையாட்டு வினையானது



ஹோலி பண்டிகையன்று ஜி. டி. எக்ஸ்பிரஸில் வெங்கட்ராமன் என்பவர் 'சுதா'. 'சித்ரா' என்ற தமது பெண்களோடு பயணம் செய்தார்.

இரயில் ''இட்டார்ஸி''யை விட்டுக் கிளம்பிக் கொண்டிருந்தது. ஹோலிப் பண்டிகை விளையாடுகிறோம் என்ற சாக்கில் வெளியில் இருந்து ஒரு கும்பல் மாட்டுச் சாணி உருண்டையை உள்ளிருந்த பெண்களின் மேல் வீச, அது அவர்களின் மேல் படாமல் அப்பா வெங்கட்ராமன் கண்ணில் பலமாகப் பட்டது. திகிலடைந்த அவரை பாத்ரூம் அழைத்துப் போய்த் தண்ணீரை விட்டுக் கழுவியும் சாணம் போகாமல் ஒரு கண்ணை அடைத்துக்கொண்டது. வலி பொறுக்க முடியாமல் மிகவும் அவதிப்பட்டார். அவர் மகள் சுதாவிடமிருந்து ஹேர் பின்னை வாங்கி கண்ணினுள் இருந்த சாணத்தை எடுத்தேன். கண்ணில் ஹேர்பின்னை விடுவது தவறு என்று தெரிந்தும் இதை அந்தச்சமயத்தில் செய்ய வேண்டி இருந்தது.

இதுபோன்ற விளையாட்டு அபாயமாக மாறுவது ஒருபுறமிருக்க, தொலைதூரம் செல்லும் இதுபோன்ற இரயில்களில் ஒரு டாக்டரை ரயில்வே நிர்வாகம் அனுப்பலாமே?

—ரங்கராஜன்.

---

அரசை மத்திய அரசு கவிழ்க்க மேற்கொண்ட பல்வேறு நடவடிக்கைகளை மற்ற எதிர்க்கட்சிகளுக்குத் தெரியப்படுத்தி மக்களிடையேயும் அம்பலப்படுத்தி இருக்கிறார்கள். நாட்டைச் சூழ்ந்துள்ள பல்வேறு பிரச்சினைகளை எதிர்க்கட்சியினர் கூடிப் பேசித் தீர்க்க வழி செய்வது என்பது ஒரு நல்ல அறிகுறி. இத்தமாதிரியான கூட்டங்கள் தேசிய ஒருமைப்பாட்டுக்கு மிகவும் உதவியாக இருக்கும. பல்வேறு சித்தாந்தங்களைக் கொண்ட கட்சிகள் ஒன்றுக்கொன்று சந்தித்துப் பேசுவது உடனடியாக நல்ல விளைவுகளைத் தோற்றுவிக்காவிட்டாலும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும் மதிக்கவும் வழி வகுத்து ஜனநாயகப் பண்புகளை வளர்க்கின்றன. இந்திரா காந்தியை ஆட்சியிலிருந்து அகற்றுவதற்காகத் தான் இவர்கள் ஒன்று கூடுகிறார்கள் என்று சிலர் சொல்கிறார்கள். இதுவரை நடந்துள்ள மாநாடுகளின் தீர்மான விவரங்களைப் பார்த்தால் இந்திரா பதவியிலிருந்து இறங்க வேண்டும் என்று தீர்மானம் போட்ட மாதிரி தெரியவில்லை. அப்படிப் போட்டால்தான் என்ன தப்பு? பிரச்சினைகளைப் பற்றிப் பேசினாலேயே 'தன்னைப் பதவியிலிருந்து இறக்கப் பார்க்கிறார்கள்' என்று கூறும் இந்திரா அவர்களை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது.

### சாதிக்பாட்சா (தி. மு. க.)

(தி. மு. க. வின் சார்பில் காஷ்மீரில் நடைபெற்ற எதிர்க்கட்சித் தலைவர்கள் மாநாட்டில் கலந்து கொண்டவர்.)

காங்கிரஸ் அல்லாத எதிர்க்கட்சிகளின் மாநாடு எதற்காக என்று என்னைக் கேட்டால், மூன்று காரணங்களுக்காக அவசியம் என்பேன்:

1. நாட்டை நிர்வகித்து வரும் கட்சியால் உருவாகி வரும் சர்வாதிகாரப் போக்கைத் தடுத்து நிறுத்தி, ஜனநாயகப் பாதையில் நாடு செல்ல எதிர்க்கட்சிகள் ஒன்று கூடுவது இன்றைய தேவைகளில் ஒன்று.

2. உண்மையான கூட்டாட்சித் தத்துவத்தை நிலைநிறுத்தி மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்களைப்பெற்றுத் தருவதற்காகத் தலைவர்கள் சந்திப்பது முக்கியம்.

3. பல்வேறு பிரச்னைகளைப் பற்றி விவாதித்து, கருத்து வேறுபாடுகள் பல இருப்பினும் முக்கியமான பிரச்னைகளில் ஒற்றுமை காண முயல்வதும் இந்தியாவின் ஒற்றுமைக்கு எந்த விதத்திலும் குந்தகம் விளைவிக்காமல், பார்த்துக் கொள்வதும் இவற்றை நிறைவேற்றப் போராடுவதும் இன்றைய எதிர்க்கட்சிகளின் முக்கியமான பணி.

**ஜனா கிருஷ்ணமூர்த்தி**
(பாரதிய ஜனதா):

பல்வேறு எதிர்க்கட்சிகள் அவ்வப்போது ஒன்று கூடி, நாட்டை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளை விவாதித்து, தீர்வு காண வழி வகை செய்ய வேண்டும் என்ற அடிப்படைக்கருத்தை பி. ஜே. பி. ஏற்றுக் கொள்கிறது. இந்த அடிப்படையில் தான் முதன் முதலாக விஜயவாடாவில் கூடிய எதிர்க்கட்சித் தலைவர்கள் மாநாட்டில் எங்கள் கட்சியின் தலைவர்கள் கலந்து கொண்டார்கள். நாட்டை எதிர் நோக்கியுள்ள, சமூக, பொருளாதார, அரசியல் பிரச்னைகளைப் பற்றி அந்த முதல் மாநாட்டில் விவாதிக்கப்பட்டது. அந்த விவாதத்தின் அடிப்படையில் எடுக்க வேண்டிய நடவடிக்கைகளை அடுத்த கூட்டங்களில் முடிவு செய்யலாம் என்று சொல்லப்பட்டது. ஆனால் அடுத்து நடந்த டெல்லி கூட்டத்திலோ அல்லது காஷ்மீர் கூட்டத்திலோ கலந்து கொள்ள முறைப்படி எங்களை அணுகவில்லை. ஆந்திர முதல்வர் என். டி. ஆர். எவ்வளவோ முயன்றும் நாங்கள் கலந்து கொள்ள முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டோம். இதற்குக் காரணம், முன்கூட்டியேஎங்களைக் கலந்து ஆலோசிக்காமல், என்ன விவாதிக்கப்போகிறோம் என்று கூறாமல் எங்கள் தலைவர்களின்சுற்றுப் பயண விவரத்தைத்தெரிந்து கொள்ளாமல் எங்களுக்கு அனுப்பப்பட்ட அவசர அழைப்புதான். கல்கத்தாவில் எங்களை அழைக்கவே இல்லை.

இனி நடக்கப் போகும் சென்னை மாநாடு குறித்து முன் கூட்டியே எங்களுக்குத் தெரியப்படுத்தி விவாதிக்கப் போகும் விஷயங்களையும் சொன்னால் நாட்டு மக்களின் நன்மையை மனத்தில் இருத்தி, பாரதிய ஜனதா தலைவர்கள் மாநாட்டில் கலந்து கொள்வர் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பேட்டி, தொகுப்பு:

பிரியன், மௌலி

---



## எதிர்காலம் உங்கள் கையில்

# பொறி இயல் தேவைகளைச் சமாளிக்க...

**''பத்தாம் வகுப்பு முடிந்ததும் என்ன படிப்பது என்று நினைப்பவர்களுக்கென இங்கு சில யோசனைகள் கூறப்படுகின்றன.''**

இன்று, பாலிடெக்னிக்குகளுக்கு மாணவசமுதாயத்தினரிடம் நல்ல வரவேற்பு உள்ளது. சென்னை பெண்கள் பாலிடெக்னிக்கில் அளிக்கப்படும் சில படிப்புகளை இங்கே அறிமுகம் செய்கிறோம்.

''வணக்கம், மிஸ்.''

''வாம்மா... இந்திரா... உங்க அப்பாவைப் பார்த்தப்போ பொண்ணு பத்தாம் கிளாஸ் எழுதியிருக்கா. மேல என்ன படிக்க வைக்கலாம்னார். பொண்ணை அனுப்புங்கன்னேன். பரீட்சையெல்லாம் எப்படி எழுதியிருக்கே?''

''நல்லா எழுதியிருக்கேன். எண்பது பர்ஸெண்ட் வரும்னு நினைக்கறேன்.''

''சிவில் இஞ்சினியரிங், எலெக்டிரானிக்ஸ், ஆர்க்கிடெக்சுரல்அஸிஸ்டென்ஷிப், இன்ஸ்ட்ருமெண்ட் டெக்னாலஜின்னு நாலுவிதமான கோர்ஸ் இருக்கு, பாலிடெக்னிக்ல. முதல் இரண்டும், கடைசியும் மூன்று வருடம். மூன்றாவது மூன்றரை வருடம்.''

''இவற்றில் என்னென்னவெல்லாம் சொல்லித் தருவார்கள் மிஸ்?''

''நாட்டில் பெருகி வருகிற இஞ்சினியரிங் தேவைகளைச் சமாளிக்கவே இத்தகைய கோர்ஸ்கள். இந்த படிப்புக்களைப் படித்தால் தியரிடிகலாக மட்டுமில்லாமல், பிராக்டிகலாகவும் அறிவை வளர்த்துக் கொள்ளலாம். இந்த நான்குக்குமே முதல் வருடப் படிப்பு பொது. இரண்டாவது வருடத்தில் தான் தேவையான பிரிவை எடுத்துப் படிக்கலாம். ஆர்க்கிடெக்சுரல் உதவியாளர் படிக்கையில், ஆறு மாதக்காலம் கட்டிடக்கலை அலுவலகங்களில் பயிற்சிக்காக அனுப்பப்படுவார்கள்''

''இவைகளைப் படித்தால் எங்கே வேலை கிடைக்கும் மிஸ்?''

''நல்ல கேள்வி இது இந்திரா! நல்ல வேலை வாய்ப்புக்கள் இருக்கின்றன. இந்த கோர்ஸ்களைப் படித்து முடித்தவுடன், இந்துஸ்தான் டெலிபிரிண்டர்ஸ், மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகம், ஐ.ஐ.டிக்கள், அ. இ. ரேடியோ, டெலிவிஷன் நிலையங்கள், டீ. வி. தயாரிப்பு நிறுவனங்கள் பாலிடெக்னிக்குகள், பி. இ. எல், இந்தியன் டெலிபோன் இண்டஸ்ட்ரி, போன்ற பல்வேறு நிறுவனங்களில் வேலைக்குச் சேரலாம். தவிரவும் தனியார் பொறியியல் நிறுவனங்களிலும் நல்ல வேலை கிடைக்கும்.

''சொந்தமாகவும் தொழில் செய்யலாம். கையில் வேலைத் திறன் இருப்போருக்கு எப்பவும் மதிப்புண்டு. இந்திரா உனக்கு இஞ்சினியரிங்ல அவ்வளவு இண்ட்ரஸ்ட்இல்லேன்னு, நீ காமர்ஸ் கூடப் படிக்கலாம். அதற்குப் பேர் டிப்ளமா இன் கமர்ஷியல் பிராக்டீஸ்.''

''இதிலே என்னென்ன சொல்லித் தருவாங்க?''

''எகனமிக்ஸ், கணிதம், அக்கௌண்டன்ஸி, ஆடிட்டிங், பேங்கிங், என்று நிறைய உபயோகமானவிஷயங்களைச் சொல்லித் தருவாங்க. ஷார்ட் ஹாண்ட், டைப் ரைட்டிங் எல்லாம் கூட உண்டு.''

''இதற்கு வேலை வாய்ப்பு எப்படி?''

''நிறைய இருக்கிறது. இந்த டிப்ளமா முடிச்சா, அதுவும் ஷார்ட்ஹாண்ட், டைப்பிங்கில் திறமையோடு முடிச்சா தொழில்வர்த்தக நிறுவனங்களில் நல்ல டிமாண்ட் இருக்கும்.''

''என்ன இருந்தாலும் இது பி. காம் போல ஆகாதே மிஸ்?''

''பி. காம் படிக்க இப்ப ஒரே க்ரேஸ். எல்லோரும் மோதினா இடம் எப்படிக் கிடைக்கும்? இந்த டிப்ளமா முடிஞ்சா இன்னொரு அனுகூலம். இதன் பிறகு நேரே பி. காம். இரண்டாவது வருடம் சேர்ந்துடலாம். வேலைக்குப் போனாலும் தபால் மூலமா, இரண்டாவது வருட பி. காம். சேர்ந்து, டிகிரி வாங்கிடலாம்.''

''எவ்வளவு மார்க் வாங்கின இதற்கு ஸீட் கிடைக்கும்?''

''கணக்கிலும், ஆங்கிலத்திலும் 40% வாங்கியிருக்கணும். மொத்தம் 100க்குக் குறையக் கூடாது.''

''தேங்க்யூ மிஸ்.''

''ஆல் தி பெஸ்ட்.''

தகவல், தொகுப்பு:

**எஸ். சந்திரமௌலி**



○ ஒர்க் ஷாப்பில் பயிற்சி...




நாலு இந்தியா வந்தாலும் இலங்கையைப் பணிய வைக்க முடியாது!


புகையிலை உற்பத்தியாளருக்கு 10 கோடி லாபம் கடவுளே!










நான் சொல்லல அனுப்பறேன். அப்புறமா வாங்க!.. இப்ப உங்களை விட முக்கியமான விருந்தாளி வந்திருக்காங்க!
எதிர்க் கட்சிகள் மகாநாடு




# கல்கி

1984 ஏப்ரல் 22
மலர் : 42 இதழ் : 38
ரக்தாக்ஷி சித்திரை 10




## கண்ணியப்போக்கா, கண் துடைப்பா?

மறுபடியும் தமிழருக்கு எதிராக வன்முறைகள். ஒருமுறை, இருமுறை, பலமுறை! ஒரு பாவமும் அறியாத தமிழர்கள் கொன்று குவிக்கப்படுகின்றனர். நம் மனம் பதறுகிறது. ஈழத்தின் ஜனாதிபதி கூறியவை எல்லாம் பசப்பு வார்த்தைகள்தாமா? பதறியதும் கலவரங்களுக்கு ஏதேதோ காரணங்கள் அடுக்கியதும் கண்ணியமாய் அழகொழுகச் சமாதானமாகப் பேசியதும் தம்பியை அனுப்பியதும் மாநாடுகள் கூட்டியதும் எல்லாமே கண் துடைப்பா?

இராது என்றே நம்புகிறோம். ஆனால் படிப்படியாக நம்மை நம்பிக்கை இழக்க வைத்துக் கொண்டிருக்கிறது இலங்கை அரசு. தமிழருக்கு எதிராகச் சிங்களவர் சினம் கொண்டு சீறி எழுந்தாலும் கூடப் புரிந்துகொள்ளலாம். ஆனால் அரசின் ஓர் அங்கமான ராணுவம் தமிழரை நசுக்குகிறது, குற்றமற்றவரும் பலியாகிறார்கள் என்றால் நம் குருதி கொதிக்கிறது. இம்மாதிரி தமிழருக்கு எதிரான பகை உணர்ச்சி கிளர்ந்தெழ, வேகம் பெற அமைச்சர்களின் பேச்சுக்களே உதவியுள்ளன. ராணுவத்தையோ, போலீஸையோ தன் கட்டுப்பாட்டுக்குள் வைக்கத் திறமையற்ற அரசு ஆளத் தகுதியற்றதாகிறது. இத்தகைய சூழலில் மே 9 கூடும் வட்டமேஜை மாநாடு என்ன சாதித்துவிட முடியும்? ஆயினும் சமரசத்துக்கும் அமைதிக்கும் நட்புக்கும் முயற்சிகள் தொடர வேண்டும் என்றே விரும்புகிறோம்.

நமது பங்குக்கு நாமும் எரிகிற தீயில் கெரசின் ஊற்றியிருக்கிறோம். தமிழ்நாட்டில் புலிப்படை பயிற்சி முகாம்கள் நடப்பதாக வெளிவந்த செய்திகள் தமிழக அரசுக்கோ அல்லது இந்திய அரசுக்கோ பெருமை அளிப்பதாக இல்லை. தமிழக போலீஸும் மத்தியப் புலனாய்வுத் துறையும் குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறதா என்றும், இதனால் ஈழத் தமிழருக்கு ஏற்படக் கூடிய பாதகமான விளைவுகளை முதல்வர் உணர்ந்திருக்கிறாரா என்றும் கேட்க வேண்டியிருக்கிறது.

ஈழ அரசைப் போலவே இந்திய அரசும் பிரிவினையை விரும்பவில்லை. ஆனால் அதுவே தேவலாம் என்று கருதும்படியான நிலைக்கு எம்மைத் தள்ளி விடாதீர்கள் என்றும் ஈழ அரசை எச்சரிக்க வேண்டியிருக்கிறது. என்னதான் சிங்களத் தீவிர வாதிகளின் செல்வாக்கு மிகுந்திருந்தாலும் பெரும்பான்மை மக்களின் பேராதரவையும் அரசியல் சாசனம் மூலம் ஏராளமான அதிகாரங்களையும் பெற்றுள்ள ஈழத்து ஜனாதிபதி விரும்பினால் இன்னும் வன்மையாகத் தமிழர் நலன் காக்கச் செயல்பட முடியும். விரும்புகிறாரா என்பதே கேள்வி.

1964, 79 ஒப்பந்தங்களின்படி பாக்கியுள்ள 90,000 தமிழருக்கும் இடைக்காலத்தில் இவர்களிடையே ஏற்பட்டுள்ள மக்கட்தொகை பெருக்கத்துக்கும் பிரஜா உரிமை வழங்கப்படல் வேண்டும். இதற்குச் சட்டம் கொண்டுவருவதாகக் கூறிக் கூறியே காலம் கடத்தி வந்திருக்கும் ஈழ அரசு இப்போது மக்கள் கருத்தறிய வோட்டெடுப்பு நடத்துவதாகக் கூறுவது கொஞ்சமும் அழகல்ல.

துரதிர்ஷ்டவசமான இப்போக்கு மாறி, தமிழரைச் சகோதரராகப் பாவித்து, சமத்துவம் தந்து, ஒத்துழைப்பைப் பெறுவதே ஈழத்தின் எதிர்காலத்துக்கு நல்லது.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

ஆரோக்கியம் அழைக்கிறது

# சரும நோய்கள்



சருமம் என்பது உடல்நோய்களை வெளிக்காட்டுகிற கண்ணாடி என்பார்கள். மருத்துவ இயலின் முன்னோடியான ஹிப்பாக்ரட்டீஸ் காலம் தொட்டே, சருமத்தில் ஏற்படுகிற நிற மாறுபாடுகளை வைத்தே நோயின் தன்மைகளைக் கண்டறிய முயன்றிருக்கிறார்கள்.

கண்கள் மஞ்சளாவது மட்டுமில்லை. சருமமும் இலேசாக மஞ்சள் படர்ந்திருந்தால் மஞ்சள் காமாலை என்று கண்டுகொள்ளலாம். சோகையாக (அனீமிக்) இருந்தால் புறத்தோல் வெளிறிப் போய் விடுகிறது. இருதய நோய் பாதித்தால் தோலின் நிறம் நீலமாகிவிடுகிறது. சிறு நீரகக்கோளாறுகளையும் வேறு சில நோய்களையும் கூடத் தோலில் ஏற்படுகிற நிறமாற்றத்தால் கண்டறிய முடிகிறது.

சாதாரணமாக எல்லோருக்கும் ஒரு மனப்பான்மை உண்டு. விளம்பரங்கள் அபரிமிதமான பிரசாரங்கள் எல்லாவற்றையும் கவனித்துக் கவனித்து, பலவேறு வகையான நோய்களைத் தாங்களாகவே கற்பனை செய்து கொண்டு, 'இப்படி இருக்குமோ?' என்று எண்ணிக் குழம்புகிற போக்கு சற்றுக்கூடுதலாகவே இருக்கிறது.

சிவப்பாய்ச் சின்னதாய்ச் சருமத்தின்மீது ஒரு புள்ளி தோன்றிவிட்டால் உடனே 'இது அலர்ஜி' என்று நினைத்துக் கொள்கிறார்கள். அத்துடன் நில்லாமல் அலர்ஜிக்கு எதிரான மாத்திரைகளையும் விழுங்கி வைக்கிறார்கள். சருமத்தின் நிறம் சற்றே மாறினாலும் இது தொழுநோயாக இருக்குமோ என்று பரபரப்பு அடைகிறார்கள். அந்த அளவுக்கு அபரிமிதமான நோய் விளம்பரங்களால் ஒருவிதமான 'லெப்ரோஃபோபியா' வேகூட ஏற்பட்டுவிட்டது.

தோல் — அல்லது சரும நோய்களில் பெரும்பாலானவை அலர்ஜியால் ஏற்படுகிறவை அல்ல. ரப்பர் செருப்புக்களை எத்தனையோ பேர்தான் அணிகிறார்கள். ஆனாலும் ஒருசிலருக்கு மட்டுமே ஒவ்வாமை (அலர்ஜி) ஏற்பட்டு எக்ஸிமா நோய் உண்டாகிறது.'

ஒவ்வாமைக்குத் தனிப்பட்ட மனிதர்களின் தோல்களின் தன்மைகள் தான் காரணம். நோய்த் தொற்று (INFECTION) என்பது எல்லோருக்குமே ஏற்படக் கூடிய ஒன்று. இதனால் எல்லோருடைய சருமமும் பாதிக்கப்படுவது ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்.

## அழற்சி நோய் (DERMATITIS)

சரும அழற்சி நோய் (DERMATITIS) என்பது இரண்டு வகைப்படும். ஒன்று பிற பொருள்களுடன் தொடர்பு ஏற்படுவதால் உண்டாகிற அழற்சி, ஒவ்வாமை போன்றவை. இதை CONTACT DERMATITIS என்பார்கள்.

மண்ணெண்ணெய், மற்றும் இரசாயனப் பொருள்களோடு புழங்குகிறவர்களுக்கு அரிக்கும் தன்மையால் ஏற்படக் கூடியது அழற்சி நோய். கடிகாரப் பட்டைகள் அணிவது கூடச் சிலருக்கு இந்த நோயை ஏற்படுத்தக் கூடும்.

சிலருக்கு இதே சரும அழற்சி நோய் ஒவ்வாமையாலும் ஏற்படக் கூடும். குறிப்பிட்ட அலர்ஜியை எவ்வாறு கண்டறியலாம்? உதாரணமாக, கடிகாரப்பட்டை அணிந்துள்ளவர்களுக்கு மணிக்கட்டில் அரிப்பும், தடிப்பும் ஏற்படும்போது அலர்ஜிதான் காரணமா என்பதை அறிய 'PATCH TEST' என்று ஒரு சோதனை முறை உண்டு. நோய்க்குக் காரணமாக இருக்குமோ என்று சந்தேகப்படுகிற பொருளைச் சருமத்தின் மீது நன்கு படியுமாறு வைத்து அதை ஒரு 'ஸெலஃபன்' காகிதத்தால் ஒட்டிவிடுவார்கள். 48 மணி நேரம் கழித்து இதை அகற்றிப் பார்த்தால், சருமத்தின் மீது தடிப்போ, பொரி பொரியாகவோ, சிவந்தோ காணப்பட்டால் அந்தப் பொருள் அலர்ஜிதான் என்பது தெரியும். இதேபோன்று பருப்பு வகைகள், தூசுகள் போன்றவற்றையும் வெவ்வேறு சோதனைகள் மூலம் அலர்ஜி ஏற்படுத்துகிறதா என்று கண்டறியலாம்.

சரும நோய்த் தொற்றுக்குப் (INFECTION) பொதுவாக மூன்று காரணங்கள் உண்டு. நெரிசலில் வாழ்வது, சுத்தமின்மை, மிக மோசமான சுகாதார நிலை இவைதான்.

தினசரி மருத்துவமனைகளுக்குப் புற நோயாளிகளாக வருகிறவர்களில் நூற்றுக்கு எழுபதுக்கும் அதிகமானவர்கள் நோய்த் தொற்றின் (INFECTION) காரணமான சரும நோய்களுடன் தான் வருகிறார்கள். இவர்களில் சிலருக்கு 'ஃபங்கஸ்' என்னும்

தொகுப்பாசிரியர்: டாக்டர் வியாஸ்
கட்டுரைவடிவம்: சுப்ரபாலன்

காளான் வகைக் கிருமிகளால் ஏற்படும் நோயும் உண்டு.

சாதாரணமான தோலின் தன்மையை விடக் கொஞ்சம் மாறுபாடான நிறமுடைய புள்ளிகள் அல்லது பொட்டுக்கள் (PATCHES) ஏற்படலாம். இதற்கு மருத்துவ ரீதியாக டஜன் கணக்கான காரணங்கள் உள்ளன. இந்த மாதிரி தோலின் நிறமாறுபாடுகளைப் பார்த்தவுடன் எல்லாமே தொழு நோய் தான் என்ற அவசரமான முடிவுக்கு வர வேண்டியதில்லை. எனினும், தொழுநோய் என்பது நம்முடைய நாட்டில் மிகவும் பரவலாகக் காணப்படுகிற ஒரு நோயாக இருப்பதால் அந்த வகைதானா என்பதைச் சீக்கிரமே கண்டறிவதில் அனைவரும் ஆர்வம் காட்டுகிறார்கள்.

வெள்ளையாகவோ நிறம் மாறியோ குறிகள் தென்பட்டால் குறைந்தபட்சம் ஆறு வாரக் காலம் பொறுத்திருந்து கவனிக்க வேண்டும். புள்ளிகள், பொட்டுக்களின் மீது உணர்ச்சியில்லாமல் அல்லது உணர்ச்சி குறைவாக இருக்குமானால் உடனே டாக்டரிடம் போக வேண்டும். சாதாரணமாகக் குழந்தைகளின் முகத்தில் இது போன்ற வெண் புள்ளிகள் பல காரணங்களால் ஏற்படுகின்றன. விட்டமின் சத்துக் குறைவால் ஏற்படலாம். வயிற்றில் பூச்சி இருந்தால் தோன்றலாம். தவறான சோப்பு வகைகளைப் பயன்படுத்துவதாலும் இது போல் நிறமாற்றங்கள் ஏற்படக்கூடும். இந்தக் கோளாறுகளெல்லாம் தற்காலிகமாக அவ்வப்போது வந்து போய் விடக் கூடியவை. ஆனால் மூன்று மாதங்களான பிறகும் இந்த நிறமாற்றப் புள்ளிகள் (PATCH) மறையாமல் தொடர்ந்து இருக்குமானால் 'பயாப்ஸி' சோதனை செய்து தொழுநோய் தானா என்பதை அறிந்து கொண்டு சிகிச்சை பெற டாக்டரை அணுக வேண்டும்.

## குங்குமம் ஏற்படுத்துகிற அழற்சி நோய்:

பெண்களைப் பொறுத்தவரை நிறையப் பேருக்குக் குங்குமம் இட்டுக் கொள்வதால் சருமத்தில் அழற்சி நோய் தோன்றுகிறது. சிலருக்கு ஆழமாகக் கறுப்பு வட்டம் ஏற்படலாம். சிலருக்குத் தோலோடு தோலாகக் கறை மாதிரி ஏற்படலாம்.

முன்பெல்லாம் வீடுகளில் தாய்மார்களே குங்குமம் தயாரித்துப் பயன்படுத்துவார்கள். மஞ்சள் சுண்ணாம்பு போன்ற மருந்துப் பொருள்களையே தயாரிப்புக்குப் பயன்படுத்துவார்கள். ஆனால் இப்போது கடைகளில் விற்பனை செய்யப்படுகிற குங்கும வகைகள் எல்லாம் இரசாயனக் கலவைப் பொருட்களால் தயாரிக்கப்படுகின்றன. சில கோவில்களில் தரப்படுகிற குங்குமப் பிரசாதங்கள் கூடப் பாதுகாப்பானவையாக இல்லை.

குங்குமத்துக்கு நிறமும் மணமும் ஊட்டுவதற்காக என்று சேர்க்கப்படுகிற பொருட்களால் வருகிற வினை இது. நம்முடைய பெண்கள், குறிப்பாக ஹிந்துக்கள், குங்குமத்தை ஒரு மங்கலச் சின்னமாகவே அணிந்து கொள்கிறார்கள். போகிற போக்கைப் பார்த்தால், இனிமேல், குங்குமம் இட்டுக் கொள்கிற எந்தப் பெண்ணுமே, குங்கும அழற்சி என்கிற (KUMKUM DERMATITIS) நோயிலிருந்து தப்ப முடியாது என்று தோன்றுகிறது.

இதனால், நெற்றியில் அழியாத கருப்பு நிற வடு ஏற்பட்டு, முகமே விகாரமாகி விடுகிறது. நாளடைவில், மற்றவர்கள் கேலி பேசும் அளவுக்கு ஓர் அடையாளச் சின்னமாகவும் மாறி விடுகிறது.

கடைகளில் குங்குமம் வாங்கும் போது அல்லது பல நிறங்களில் குங்குமங்களை இட்டுக் கொள்ளும்போது, அவற்றில் ரசாயனப் பொருட்கள் சேர்ந்துள்ளனவா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அனுமதிக்கப்பட்ட வண்ணங்கள் மட்டுமே தான் தயாரிப்பில் பயன்பட்டுள்ளனவா என்பதைக் கேட்டறிய வேண்டும். மற்றவை சருமத்தைக் கெடுத்துவிடும். திருவிழா, சந்தைகளில் குங்குமம் வாங்குவதைத் தவிர்த்து விடுங்கள்.

—தொகுப்பாசிரியர் குறிப்பு



சருமத்தின் நறுக்குவெட்டுத் தோற்றம்





## வெண் குஷ்டம் (VITILIGO) ஒரு நோயா?

நம்மில் பலரையும் மிரட்டுகிற ஒரு சொல்லாக 'வெண் குஷ்டம்' என்பது புழக்கத்தில் வந்து விட்டது. இது நோயே அல்ல. புறத்தோலின் நிறமிகள் (PIGMENTS) குறைவாகி விடுவதுதான் தோலின் நிறம் மாறுவதைக் காட்டுகிறது. நிறமிகள் இம்மாதிரி திடீரென்று குறைந்து போவதற்கு என்ன காரணம் என்பது இதுவரை யாராலும் கண்டறியப்படவில்லை. எனினும் படித்து நன்கு விவரமறிந்தவர்கள் கூட இந்த வெள்ளைப் புள்ளிகள் உள்ளவர்களை மணந்து கொள்ள முன் வருவதில்லை. வெள்ளைச் சருமமுடைய மேற்கத்தியர்களுக்கு இந்த நோயால் அதிகம் பாதிப்பு இல்லை. கருப்புத் தோல் மனிதர்களான ஆப்பிரிக்கர்களும் நம்மவர்களும் தான் இதைப் பெரிதாக நினைக்கிறோம். நூற்றுக்கு எழுபது பேர் வரை, புதிதாக நிறமிகளை வளர்க்கக் கூடிய மருந்துகளால் பயனடைகிறார்கள். சிலருக்குத் தான் என்ன செய்தாலும் இந்த நிறமிகள் புதிதாக உருவாவதில்லை.

> **சரும நிறத்தை வெளுப்பாக்கும் என்று விளம்பரப் படுத்தப்படுகிற பலவகைப் பொருள்களால் எந்தப் பயனும் கிடையாது.**

## கருப்பு நிறம் கேவலமா?

சருமத்தின் கருப்பு நிறம் பலராலும் வெறுக்கப்படுகிறது. இதை மாற்றிக்கொண்டு கொஞ்சமேனும் மாநிறம் அடைய முடியாதா என்று ஏங்குகிறவர்கள் உண்டு. விளம்பரம் செய்யப்படுகிற விதம்விதமான மருந்துகள் பூச்சுக்கள் எல்லாவற்றையும் வாங்கிப் பயன்படுத்துகிறார்கள். 'கருப்பே ஓர் அழகு' என்று ஆப்பிரிக்க இன மக்களிடையே சொல் வழக்கு ஒன்று உண்டு. மேலை நாடுகளில் சருமத்தின் நிறம் கருப்பாக வேண்டும் என்பதற்காகப் பலர் வெப்பமான பகுதிகளில் போய்ச் சிலநாள் இருந்துவிட்டு வருகிறார்கள். நம்முடைய இதிகாச நாயகனான கண்ணன் நீலமேக வண்ணன்தான். பார்வதி கரும் பச்சைதான் நிறம் எப்படியிருந்தால் என்ன? 'பர்ஸனாலிடி' என்கிற உடற்கட்டு அழகாக இருந்தால் போதுமே! பிறக்கும் போதே இயற்கையாக அமைந்த நிறத்தோடு வாழப் பழகிக் கொள்ளவேண்டும்.

சரும நிறத்தை வெளுப்பாக்கும் என்று விளம்பரப்படுத்தப்படுகிற பலவகையான பொருள்களால் எந்தப் பயனும் கிடையாது. வாசனைப் பொருட்கள் கலக்காத நிறம் மாற்றும் பூச்சு மருந்துகளே கடைகளில் கிடையாது. இவை, சூரிய வெளிச்சத்தை வடிகட்டிக் குறைவாகச் சருமத்தின் மீது பட வைக்கக்கூடும். இதனால் சருமத்தின் நிறம் வெளுத்தோ, சிவந்தோ போவதாக நினைத்துக் கொள்ளலாம். 'சருமத்தின் மீது சூரிய வெளிச்சம் பட்டால் தான் கறுப்பு நிறம் ஏற்படும்' என்கிற அடிப்படை உண்மையைத் தவிர வேறு எதுவும் இந்தப் பூச்சுக்களில் கிடையாது.

> தொகுப்பாசிரியர் குறிப்பு:
>
> சருமம் வெளுப்பாக அழகைக் கூட்ட மருந்துகளால் ஒருநாளும் முடியாது. எனவே கண்ட கண்ட மருந்துகளை விளம்பரங்களில் மயங்கி வாங்கிப் பூசி அவதியுற வேண்டாம்.
>
> பாசிப் பருப்பு மாவையும் எலுமிச்சைப் பழச் சாற்றையும் கலந்து பயன்படுத்திப் பலர் முகத்தை வசீகரமாக வைத்துக் கொள்கிறார்கள். விளம்பரங்களைப் பார்த்துத்தான் பெண்கள் மஞ்சளைப் பற்றி நினைக்கிறார்களே தவிர வீட்டில் பாட்டியோ அம்மாவோ அனுபவ ரீதியாகச் சொல்வதையெல்லாம் ஏனனம் செய்யாமல் கேட்கிறார்களா?

## சருமத்தில் ஏற்படும் காசநோய்:

'கண்டமாலை' என்று வழங்கப்படுகிற சருமத்தின் மீது உண்டாகும் காசநோய்க்கு முன்பெல்லாம் சரியான வைத்தியமுறைகள் இருந்ததில்லை. KING'S EVIL என்று ஒரு பெயரும் இதற்கு உண்டு. பிரிட்டனில் விக்டோரியன் காலம் என்று வழங்கப்பட்ட நாட்களில் அரண்மனையின் முன்னால் ராஜ தரிசனத்துக்காக ஏராளமானவர்கள்- இந்த வகை நோயாளிகள் - வெய்யிலையும் பாராமல் காத்துக் கிடப்பார்கள். அரசனைத் தொட்டு விட்டால் நோய் குணமாகிவிடும் என்று ஒரு நம்பிக்கை இருந்தது. அறிஞர் சாமுவேல் ஜான்ஸனுக்கும் இந்தக் கண்டமாலை நோய் இருந்தது. மற்றவர்கள் மாதிரி வரிசையில் வராமல் தனக்கிருந்த வி.ஐ.பி. அந்தஸ்தைப் பயன்படுத்தி நேரடியாக அரசனிடம் சென்று 'ராயல் டச்' என்கிற திருக்கரம் தீண்டப்பட்டார். எனினும் அவருக்கு நோய் குணமாகவில்லை. அதே நோயால் சில மாதங்களில் அவர் இறந்தும் போனார்.

வெய்யிலில் காத்துக் கிடந்த சிலருக்கு நோய் குணமாகியிருக்கக் கூடும். விஞ்ஞானபூர்வமான உண்மை இதுதான். சூரிய ஒளியி

ஆள்ள கதிர்களுக்குக் காச நோயைக் குணப்படுத்துகிற சக்தி உண்டு. ராஜதரிசனத்துக்காகக் காத்துக் கிடந்த சிலருக்கு இந்த 'வெய்யில்' மருந்து பயன்தந்திருக்கிறது. அரசனைத் தீண்டியதாலோ அரசன் தீண்டியதாலோ ஏற்படவில்லை. வெய்யில் படாமல் குறுக்கு வழியில் போன ஜான்ஸனுக்குப் பலன் கிடைக்காததற்கு இதுவும் ஒரு காரணம்.

நல்ல உணவும் வெய்யிலில் உடம்பைச் சற்றுக் குளிப்பாட்டுவதும் (SUN BATH)காச நோயைக் குணப்படுத்தக் கூடியவை என்பது தான் உண்மை.

> அந்தக்காலத்தில் காசநோய்க்கான மருத்துவமனைகளை மலைப்பிரதேசங்களிலும் நல்ல காற்றோட்டமுள்ள இடங்களிலும் கட்டி வைத்ததற்கு இதுவே காரணம்.
>
> – தொகுப்பாசிரியர் குறிப்பு.

## முகப்பரு (ACNE)

இது நோயே அல்ல. சிலருக்குப் பதின்மூன்று அல்லது பதினாறு வயதிலேயே முகப்பருக்கள் தோன்றலாம். 19 20 வயதுக்குள் ஒன்றிரண்டு முகப்பருவாவது தோன்றாமலிருக்காது. தோலில் ஊறிவருகிற 'ஸீபம்' என்னும் எண்ணெய்ச் சுரப்பியின் முகப்பு அடைபட்டுச் சிலசமயங்களில் முகப்பரு உண்டாகும். எண்ணெய்ச் சத்து வெளியே வர முடியாமல் உள்ளேயே தேங்குவதால் இது நேர்கிறது. இந்த எட்டு ஆண்டுக்காலத்தில் முகப்பருவின் காரணமாகத் தழும்புகள் விழாமல் பார்த்துக் கொள்வது தான் முக்கியமானது. பருவம் அடைகிற வயதில் இது மிகவும் சாதாரணமாக வரக் கூடிய ஒன்றுதான். ஒருசிலருக்குக் குளுமையாக்கப்பட்ட திரவ நைட்டிரஜன், எலக்ட்ரோ காட்டரி, இன்ஃப்ரா ரெட் சிகிச்சை போன்ற முறைகளைப் பயன்படுத்தி டாக்டர்கள் முகப்பருவை அகற்றிவிடுவார்கள்.

வாசனைப் பவுடர்கள், சோப்பு வகைகள் போன்றவற்றை அடிக்கடி மாற்றிக் கொண்டே இருக்கக் கூடாது. பழகிவிட்ட ஒன்றை விட்டுவிட்டுப் புதிதாய் ஒன்றைப் பயன்படுத்தத் தொடங்குகிற போதும் ஒவ்வாமை ஏற்பட்டு முகப்பருக்கள் தோன்றலாம்.

## மரு (WART) எப்படிக் குணமாகும்?

இதை அகற்றுவதற்காக என்று பாட்டி வைத்தியம் முதல் பல வகையான வைத்தியங்கள் உண்டு. ஆனால் எந்த வைத்தியமுமே தேவையில்லை என்பதுதான் உண்மை. சிலருக்கு இதுதானே உதிர்ந்து போய்விடும்.

ஒரு வேடிக்கையான நிகழ்ச்சியைக் குறிப்பிட வேண்டும். ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் லண்டனிலேயே நடந்தது இது. மருவைப் போக்கி விடுகிறேன் என்று தடபுடலான விளம்பரத்துடன் ஒருவர் பி.பி.ஸி. டெலிவிஷன் நிகழ்ச்சி ஒன்றில் தோன்றினார். முகத்தில் மரு உள்ளவர்களெல்லாம் தங்கள் வீட்டுத் தொலைக்காட்சிப் பெட்டியின் முன்னால் குறிப்பிட்ட நேரத்தில் உட்கார்ந்து கவனியுங்கள் என்று அறிவிக்கப்பட்டது. நிகழ்ச்சியின் முடிவில்அவர் ஒரு மந்திரக்காளி மாதிரிஎதையோசொல்லி'கடவுளின்பேரால் நான் உங்களுக்கு இதைச் செய்கிறேன்' என்று சொன்னாராம். நிகழ்ச்சியைக் கவனித்தவர்களில் பாதிப் பேருக்குமேல் தங்கள் உடம்பிலிருந்த மரு உடனே உதிர்ந்து போனதாய் எண்ணிக்கொண்டார்களாம். இது வெறும் மனநிலை பற்றியசமாசாரம்தான். இங்கே கூடக் கயிறுகட்டுவது என்றெல்லாம் இருக்கிறதே! அதுபோலத் தான் இதுவும்!

அதாவது AUTO SUGGESTION மூலம் தான் குணம் ஏற்படுகிறதே தவிர மருந்துகளினால் மட்டும் இல்லை.

## வைட்டமின் விவகாரங்கள்:

சத்துக் குறைவு என்று எண்ணிக்கொண்டு டாக்டர்களின் ஆலோசனை பெறாமல் தாங்களாகவே பலவகையான வைட்டமின் மாத்திரைகளை விழுங்கும் பழக்கம் பலரிடம் இருக்கிறது. தேவையில்லாமல் அளவுக்கு அதிகமான வைட்டமின் மாத்திரைகளை உட்கொள்வது தவறான விளைவுகளை ஏற்படுத்தும். தண்ணீரில் கரையக் கூடிய வைட்டமின் மாத்திரைகளால் சருமம் பாதிக்கப்படுவதில்லை. ஆனால் எண்ணெயில் கரையக் கூடிய ஏ, டி, வைட்டமின்கள் சருமத்துக்கு ஊறு விளைவிக்கின்றன. முக்கியமாக 'ஏ' வைட்டமின் மாத்திரைகள் மிகவும் அதிகமான அளவில் தவறாகப் பயன்படுத்தப்படுகின்றன. மயிர் உதிர்வது தோலில் வறண்ட தன்மை ஏற்படுவது — இவற்றுக்கெல்லாம் ஏ வைட்டமின் தரப்படுகிறது. மாதக் கணக்கில் இவற்றை உட்கொள்வதன் விளைவாக நோய் குணமடைவதில்லை. மாறாக இந்த மாத்திரைகளின் விளைவாகவே மயிர் உதிர்வதும் வறண்ட தன்மையும் உச்ச நிலையை அடைகிறது. வைட்டமின் 'டி' யால் சருமத்துக்கு அதிக அளவில் பாதிப்பு ஏற்படாவிட்டாலும்





ஜலதோஷத்துக்குப் பிராணாயாமத்தைவிட சிறந்த மருந்து கிடையாது. சிறந்த தடுப்பு முறையும் இதுதான். நேராக நிமிர்ந்து உட்கார்ந்து ஒரு மூக்கால் மூச்சை நிதானமாய் உள்ளுக்கு இழுத்து மற்றொரு மூக்கால் மெல்ல வெளியே விடவேண்டும். ஒரே சீராகப் பத்து முறை தினமும் செய்து வந்தால் ஜலதோஷம் கிட்டே நெருங்காது.

சிறுநீரகம் பாதிக்கப்பட இது துணை நிற்கிறது.

முன்பெல்லாம் சரும நோய் எதுவானாலும் கால்ஷியம் ஊசி போடுகிற வழக்கம் இருந்தது. அதனால் பிரமாதமான பலன் ஏதுமில்லை என்பது இப்போது நிரூபணமாகி விட்டது.

**சருமப் பாதுகாப்பு–அவசியமா?**

அளவுக்கு மீறி அக்கறை காட்டிச் சருமப்பாதுகாப்புப் பெற முயல்வது தவறானது. தினசரி ஆறு ஏழு முறைகள் முகம் கழுவுவது, நினைத்த போதெல்லாம் குளிப்பது இவையெல்லாம் கூட சரும நலனுக்குத் தீங்கானவைதான்.

சருமத்தின் மேல் பகுதியில் உள்ள இயற்கையான எண்ணெய்ச் சத்து புறக்காற்றில் உள்ள தூசுகள் நுண்கிருமிகள் போன்றவை தோலின் வழியே உள்ளே சென்று விடாமல் தடுத்து நிறுத்துகிறது. அடிக்கடி குளிப்பது, முகம் கழுவுவது போன்ற செயல்களால் இந்த எண்ணெய்ப் பசை முழுவதும் கெட்டுப் போய் சருமநலன் கெட்டுவிடும். கடினத்தன்மையுடைய சில சோப்பு வகைகளைப் பயன்படுத்துவதும் ஆபத்தானதுதான். மென்மையான சோப்பு வகைகள் சரும ஆரோக்கியத்திற்கு உகந்தவை.

கோடைக்காலங்களில் இரண்டு முறையும் பனி மழை நாட்களில் ஒருமுறையும் மட்டும் குளித்தால் போதுமானது. கோடையில் மட்டும் இரண்டு மூன்று முறை முகம் கழுவினால் போதுமானது. சோப்புக்களால் உடம்பை அதிகமாக அழுத்தித் தேய்த்துக் குளிப்பதும் சருமத்தின் மென்மையைக் கெடுத்து நாசமாக்கிவிடும்.

**எண்ணெய்க் குளியல் அவசியமா?**

> எண்ணெய்க் குளியலைப் போல் நேரத்தை வீணடிக்கிற காரியம் எதுவும் இல்லை. இது தென்னிந்தியாவில் அதுவும் தமிழகத்தில் மட்டுமே உள்ள பழக்கம்.

அவசியமே இல்லை. இதனால் சருமத்துக்கோ உடலுக்கோ எந்த விதமான பயனுமில்லை. இதைப் போல் நேரத்தை வீணடிக்கிற காரியம் எதுவும் இல்லை. இந்த எண்ணெய்க் குளியல் என்னும் பழக்கம் தென்னிந்தியாவில் அதுவும் தமிழகத்தில் மட்டுமே உள்ள ஒன்று என்று கூடச் சொல்லலாம். உலகின் வேறு எந்தப் பகுதியிலும் இப்படியொரு பழக்கம் இருப்பதாய்த் தெரியவில்லை.

எண்ணெய் தேய்த்துக் குளித்தவுடன் நல்ல தூக்கம் வருகிறதே என்றும் புத்துணர்வு கிடைக்கிறதே என்றும் கேட்கலாம். ஆனால் இதன் காரணம் எண்ணெய் மட்டுமே அன்று. தலையில் எண்ணெயை வைத்துக் கொண்டு மணிக்கணக்காய் உடம்பில் வழிய விட்டுக் கொள்வதும், மடமடவென்று தலையில் முதுகில் எல்லாம் அடித்துக் கொள்வதும் கூட உண்டு. இப்படித் தேய்த்துக் கொள்கிற முறையினால் 'மஸாஜ்' மாதிரியான பலன் கிடைக்கிறது என்பதே காரணம்.

பனிக்காலமானால் மட்டும் உடம்பில் சிறிதளவு எண்ணெயைப் பூசிக்கொண்டு குளிக்கலாம். இது தோலின் வறட்டுத்தன்மைக்கு இதமாக இருக்கும்.

சருமநோய் நிபுணர் டாக்டர் பாட்ரிக் யேசுடியான் டாக்டர் வியால் உரையாடலி விருந்து தொகுப்பு.

## மூன்று வகை நோய்கள்:



உடல் சம்பந்தமானவை: தொற்று நோய்கள், நீண்ட நாள் சரும வியாதிகள், கட்டுப்பாட்டினைப் பின்பற்றாமல் உடலுக்குள் சேர்க்கும் விஷப் பொருட்கள் போன்றவற்றால் வருவன.

மனம் சம்பந்தமானவை: அச்சம், பொறாமை, கவலைகள், கோபம், உணர்ச்சி வயப்படும் தன்மை இவற்றால் குடலில் அதிகமாக அமிலங்கள் சுரந்து மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பாதிப்பது மனநோய்.

ஆன்ம நோய்: தனக்கும் இறைவனுக்கும் உள்ள உயர்ந்த தொடர்பை அறியாமல் தீவிரமாக அஞ்ஞானத்தில் ஆழ்ந்திருப்பதால் வருவது.

கவிஞர் வேதம் (எளிய யோகாசன முறைகள்)

# டெபாசிட்தாரர்களுக்கு

# 24%

## வட்டி வழங்கப்படுகிறது

மேற்படி கூடுதல் வட்டி
பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு மட்டும்
''வெள்ளிக் குத்துவிளக்கு'' அன்பளிப்புடன் வழங்கப்படும்.

கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில்
டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(A LEADING HIRE PURCHASE FINANCIERS)

| | | |
|---|---|---|
| சென்னை | : | 39, நடேச ஐயர் தெரு (2வது மாடி) (சிவா-விஷ்ணு கோயில் அருகில்) உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன் : 447186 |
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971 |
| திருச்சி | : | 22 மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008 |
| பாண்டிச்சேரி | : | 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001 போன் : 1626 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483 |
| பட்டுக்கோட்டை | : | 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453 |

CHARI

# மலைக்கனல்

நா. பார்த்தசாரதி

## அத்தியாயம் 2

"ஐயா அரைத்துப் போட்டிருக்கிற பச்சிலையாலும், கட்டியிருக்கிற பட்டை மருந்தாலும்உங்களைக் குணப்படுத்துமோ இல்லையோ இந்தப் பூவாசனையும், சந்தன மணமுமே சீக்கிரம் குணப்படுத்தி விடும்னு நினைக்கிறேன்."

கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்த அவனைப் பார்த்துச் சொன்னாள் பூத்தொடுத்துக் கொண்டிருந்த பண்டாரத்தின்மகள் சண்பகம். கட்டிலுக்கு இப்பால் நின்றபடி பண்டாரம் அப்போது சந்தனம் அரைத்துக் கொண் டிருந்தார்.

தன் வலது கையால் தலையைத் தாங்கி முட்டுக்கொடுத்துக் கொண்டே அவள் பூத் தொடுக்கும் அழகை இரசித்தபடி கயிற்றுக் கட்டிலில் ஒருக்களித்துப் படுத்திருந்த திருமலை அவள் கூறியதைக் கேட்டுப் பதில் எதுவும் கூறாமல் புன்னகை பூத்தான். அவள் என்ன சொல்லியிருந்தாளோ அதை ஒப்புக் கொண்டு அங்கீகரிப்பது போலிருந்தது அந்தப் புன்னகை.

இயல்பாய் ஏற்கெனவே அழகா யிருந்த சண்பகம் தரையில் அமர்ந்து பூத்தொடுக்கும் போது மேலும் அழகாகக் காட்சியளித்





தான். நாட்கள் இலையுதிர் காலத்துச் சருகுகள் போல் உதிர்ந்து விட்டன. எந்தப் பிறவியில் செய்திருந்த புண்ணியமோ ஜமீன் ஆட்கள் அவனை அடித்து உதைத்துச் சுயநினைவற்ற நிலையில் தேரடி மைதானத்தில் கொண்டுவந்து போட்டு விட்டுப் போன போது பண்டாரமும் அவர் மகளும் அவனை முதலில் பார்த்து இருள் புலரு முன்பே நந்தவனத்து மண்டபத்துக்குக் கொண்டு வந்து சேர்த்திருந்தார்கள்.

பெரிய காடு போல் பரந்திருந்த அந்த நந்தவனத்தின் நடுவே பூத்தொடுக்கவும், சந்தனம் அரைக்கவும் பயன்பட்ட அந்த மண்டபத்தில் அவன் தலைமறைவாகத் தங்கிக் குணம் பெற முடிந்திருந்தது.

சண்பகம் சொல்லியிருந்தது போல் மனமும், உடலும் நலிந்து போயிருந்த அவனைப் பசுமை கமகமக்கும் சுத்தமான அந்தக்காற்றும், மலர்களும் சந்தனமும் இடைவிடாமல் மணக்கும் அந்த மண்டபமும் தான் குணப்படுத்தியிருந்தன. பூஞ்செடிகொடி மரங்களைத் தவிர நந்தவனம் நிறைய மூலிகைகள் பார்த்துப் பச்சிலைகளை வளர்த்திருந்தார் பண்டாரம். பூத்தொடுப்பது தவிர நாட்டு வைத்தியம், மாந்த்ரீகம் வில்லுப்பாட்டு தெருக்கூத்து ஆகியவற்றிலும் முத்துப்பண்டாரத்துக்கு ஈடுபாடு உண்டு.

''நீ கொஞ்ச நாளைக்கு இந்த நந்தவனத்துக்குள்ளேயே தலைமறைவா இருந்துக்க! அதுதான் உனக்கு நல்லது தம்பி! உன் உயிருக்குக் சருக்கட்டிக்கிட்டு அலையப் போறாங்க.'' — பண்டாரம் அவனை எச்சரித்தார்.

''நான் உயிருக்குப் பயப்படலே! உலகத்திலே எவ்வளவு காலம் இருக்கணும்னு முடிஞ்சிக்கிட்டு வந்திருக்கமோ அவ்வளவு காலம் நம்மை யாரும் எதுவும் பண்ணிட முடியாது. என்னிக்குப் போகணும்னு இருக்கோ அதுக்கு மேலே கால்நாழி கூட இருந்துறவும் போறதில்லே.''

''இந்த வேதாந்தப் பேச்செல்லாம் மூட்டை கட்டி வையி தம்பி! இப்போ நீ ரொம்ப முன் யோசனையோடவும் ஜாக்ரதையாகவும் நடந்துக்கவேண்டிய நேரம். உள்பட்டணத்து உடையாருங்க பெரிய போக்கிரிங்க. பழி பாவத்துக்கு அஞ்ச மாட்டாங்க.''

''நானும் அதே பெரிய உடையாருக்குப் பிறந்த மகன்தான்.''

''அந்த விருப்பெல்லாம் இப்போ வேணாம்! அதுக்கெல்லாம் இது சமயமில்லே தம்பி!''

இதமாகப் பேசி முத்துப் பண்டாரம் அவனை நிதானப்படுத்தினார். அவருடைய வயதும் பக்குவமும் நடைமுறை வாழ்க்கையின் ஞானங்களை அவருக்குப் போதிய அளவு அளித்திருந்தன. 'அடித்துப் போட்டுவிட்டார்கள். அவமானப்படுத்தி விட்டார்கள்' என்ற உணர்வுக் கொந்தளிப்பில் அவன் இருந்தான். அவர்கள் நயவஞ்சகமாக நள்ளிரவில் பாதித் தூக்கத்தில் எழுப்பித் தன்னை அடித்து உதைத்து அவமானப்படுத்தியது போல் யாருக்கும் தெரியாமல் நடுநிசிக்கு மதில் சுவர் ஏறிக் குதித்து உள்பட்டணத்தில் புகுந்து சின்னக் கிருஷ்ணராஜ உடையார் என்ற கிருஷ்ணராஜைக் கண்டம் துண்டமாக வெட்டிக் கொலை செய்து விட வேண்டும்போல் திருமலையின் கைகள் துறுதுறுத்தன. பண்டாரமும் சண்பகமும் பக்கத்திலேயே இருக்கவில்லையானால் அவன் எந்தப் பைத்தியக்காரத்தனமான முடிவுக்கும் சுலபமாக வந்திருப்பான். அவனுடைய உடம்பி

லிருந்த காயங்கள், மனத்திலிருந்த பழிவாங்கும் வெறி, குரோதம் எல்லாவற்றையும் அவர்கள்தான் மெல்ல மெல்லக் குணப்படுத்தினார்கள். ஆற வைத்தார்கள்.

உலகில் மனிதர்களைக் குணப்படுத்தும் மருந்துகளில் எல்லாம் மிகப்பெரிய மருந்து அன்புதான். அன்பும் பிரியமும் உள்ளவர்களின் நெருக்கமும், அண்மையும் எத்தனை பெரிய நலிவையும், நசிவையும் கூடச் சரிக்கட்டி விட முடியும். கூர்ந்து கவனித்தால் மிகப்பல வேளைகளில் மனிதன் ஏங்குவதும், ஏங்க வைப்பதும் உண்மை அன்புக்காகத்தான் என்பது புரியும். இந்த விதமான அன்பு உள் பட்டணத்தில் யாரிடமிருந்தும் வாழ்வின் எந்த விநாடியிலும் அவனுக்கு இதுவரை கிடைத்ததில்லை. நந்தவனத்தில் அப்படி அன்பு சுலபமாகவும், இயல்பாகவும் கிடைத்தது. அவன் யார், தனக்கு என்ன உறவு ஆக வேண்டும், நாளைக்கு அவனால் தனக்கு என்ன ஆகப் போகிறது என்றெல்லாம் யோசித்துக் கணக்குப்பார்க்காமல் பண்டாரமும் அவர் மகளும் அவனைக் காப்பாற்றி ஆதரித்து உதவினார்கள். அவர் குடும்பம் முழுவதுமே அவனுக்காக உதவியது.

உள் பட்டணத்துப் பெரிய புள்ளிகள் விரோதம் காரணமாக அடித்துக்கொண்டு வந்து போட்டு விட்டார்கள் என்று தெரிந்தாலே அந்த ஊரில் மற்றவர்கள் அடிபட்டவன் பக்கத்தில் வரக் கூடப் பயந்து ஒதுங்கிப் போய் விடுவார்கள். உடையார்களுக்கு வேண்டாதவனுக்குத் தாங்கள் உதவினால் தங்களுக்கு என்ன ஆபத்து வருமோ என்று மற்றவர்கள் நினைக்கிற அளவு கெடுபிடி உள்ள ஊர் அது.

எல்லா விஷயமும் தெரிந்த பின்பும் பண்டாரம் அவனை நந்தவனத்திலிருந்து வெளியே போகச் சொல்லித் துரத்திவிடவில்லை. ஒதுக்கப்படுகிறவனை — ஒடுக்கப்படுகிறவனை - வலுவான மனிதர்களால் புறக்கணிக்கப்படுகிற எளியவனைக் காப்பாற்றி உதவ வேண்டுமென்ற அவரது மனிதாபிமானம் அவனை வியப்பில் ஆழ்த்தியது.

நந்தவனத்து மூத்துப் பண்டாரம் நாலைந்து மாதக் காலம் அவனை நந்தவனத்துக்குள்ளிருந்து வெளியே போவதற்கே அனுமதிக்கவில்லை. அவன் உயிர் வாழ வேண்டுமென்பதில் அவனை விட அதிக அக்கறை காட்டினார் அவர். பண்டாரத்தின் குடியிருப்பும், நந்தவனத்தின் மற்றொரு பகுதியில் உள்ளேயே இருந்தது. அவனையும் தன் குடும்பத்தில் ஒருவனைப் போல் சேர்த்துக்கொண்டு வேளாவேளைக்குச் சாப்பாடு போட்டுக் காப்பாற்றினார் பண்டாரம்.

காயங்கள் ஆறி உடம்பு தேறுகிற வரை பூக்கட்டும் மண்டபத்தில் அவன் படுத்திருந்த கயிற்றுக் கட்டிலுக்கே சாப்பாடு தேடி வந்து விடும். சண்பகம்தான் கொண்டு வருவாள். உடம்பு தேறி எழுந்து நடமாடத் தொடங்கியபின் அவன் பண்டாரத்தின் வீட்டுக்கே போய்ச் சாப்பிடத் தொடங்கினான்.

அங்கே அவர்களுடைய வேலைகளை மெல்ல மெல்ல அவனும் பங்கிட்டுக் கொண்டுசெய்யத் தொடங்கியபோது, ''தம்பி! நீ இப்பிடி எல்லாம் சிரமப்படணும்கிறதில்லே...'' என்று பண்டாரம் உபசாரமாக மறுத்ததை அவன் ஏற்கவில்லை. ஏக்கர்க் கணக்கில் மல்லிகையும், முல்லையும், ரோஜாவும், பூத்துக் குலுங்கும் அந்தப் பெரிய நந்தவனத்தில் அதிகாலையில் பூக்களைக் கொய்வது தொடங்கிப் பல வேலைகளைத் இருமலையும் தானாகவே இழுத்துப் போட்டுக்கொண்டு செய்தான். சண்பகத்திடம் பூத்தொடுக்கக் கற்றுக் கொண்டான். சந்தனம் அரைத்தான். அது நல்லதோர் உடற்பயிற்சியாகவும் அமைந்தது. அதிகப் பருமனில்லாமல் வெடவெட என்றிருந்த அவன் உடல்வாகு

பாக்குமரம், தென்னை மரம் ஏற வசதியா யிருந்தது. பாக்குக்குலே, தேங்காய், இளநீர் பறிக்கிற வேலையையும் அவன் மேற்கொண்டான். மனிதர்களின் துவேஷம், வஞ்சகம், வெறுப்பு, சொத்து ஆசை, குரோதம், கொலைவெறி இவற்றை எல்லாம் உள்பட்டணத்துப் பெரும் புள்ளிகளிடம் பார்த்துப் பார்த்துச் சலித்திருந்த அவனுக்குப் பூக்கள், செடி, கொடிகள், பசுமை, இவற்றினிடையே உலாவுவது மிகவும் பிடித்திருந்தது.

''உனக்குப் பிடித்தால் நீ இங்கேயே இருக்கலாம்! எனக்கு ஆட்சேபனை எதுவும் இல்லே. ஆனால் நான் ஏதோ உன்னைக் காப்பாத்தினேன் என்பதற்காக இங்கேயே நந்தவனத்துக்குள் ஒரு வேலையாளாக வைத்துக் கொண்டதாக என்னைப் பத்தி நீ தப்பா நினைக்கப் படாது பாரு தம்பி! அதுனாலே நான் மனசு விட்டுப் பேசறேன். வெளியூருக்கு எங்காவது போய் நீ வேறு தொழில் பண்றதுன்னாலும் போகலாம்... இங்கேதான் உன்னைத் தலையெடுக்க விட மாட்டாங்க... இந்த ஊர் அப்பிடி...'' என்று தயக்கத்தோடு ஒருநாள் கூறினார் பண்டாரம்.

திருமலை உடனே அவருடைய அபிப்ராயத்தை மறுத்து விட்டான்.

''நான் இப்பச் சொல்ற வார்த்தையை உறுதியா வச்சுக்குங்க. என்னைப் பெத்த தாய் மேலே சத்தியம் பண்ணிச் சொல்றேன். நான் இந்த ஊரை விட்டுப் போகப் போறதில்லே. எந்தத் தெருவிலே என்னை அடிச்சுப் போட்டாங்களோ, அங்கேயிருந்தே நான் யாருன்னு காமிக்கிறேனா இல்லியா பாருங்க...''

''எனக்கென்னமோ பயமாயிருக்குத்தம்பி! இது படுபோக்கிரிப்பய ஊரு...!''

''இருக்கட்டுமே! ஊர் போக்கிரிப்பய ஊருன்னா நாம அதை விடப் பெரிய போக்கிரியா ஆயிட்டாப் போவுது!...''

''உள் பட்டணத்தை எதுத்துக்கிட்டா அது எப்படித் தம்பி முடியும்?''

''முடியுதா இல்லியா பாருங்களேன்? வெள்ளைக்காரன் இந்த நாட்டை விட்டுப் போயிட்டான்னா — உள் பட்டணத்துவாசிங்க கதி அதோ கதிதான். வெள்ளைக்காரன் போகத் தான் போறான்... உள்பட்டணம் உடைஞ்சு போய் உடையாருங்க வெளியே பிச்சைக்காரனுகளா வந்து அலையத்தான் போறாங்க... பார்த்துக்கிட்டே இருங்க... இது நடக்கத்தான் போகுது...''

''ஐயையோ! நாம எதுக்குக் கெட்டது நினைக்கணும்? நல்லதாவே நினைப்போமே.... அவங்க பிச்சை எடுத்தா நமக்கு என்ன ஆச்சு? கடவுள் புண்ணியத்துலே அவுங்க நல்லாவே இருக்கட்டும்ப்பா...''

''வரவரக் கடவுள், சாமி, பூதம்லாம் கூடப் பணம் படைச்சவனுடைய கையாளுங்க மாதிரித்தான் தோணுது.... ஏழைக்கு நல்லது செய்யக் காணோம். ஏழையைத்தான் மேலே மேலே சோதிக்குதுங்க....''

''அப்படிச் சொல்லாதப்பா தம்பி!''

''எனக்கென்னமோ வரவர அப்படித் தான் தோணுது. இல்லேன்னு எனக்கு



சமீபத்தில் ஒருநாள் கடைவீதியிலிருந்து எனது கணவர் வாங்கிவந்திருந்த கொத்துமல்லி கற்றையைப் பிரித்த போது திடுக்கிட்டு விட்டேன். காரணம் பார்ப்பதற்குக் கொத்துமல்லி போலவே இருப்பதும் மேல் சென்னையில் வெகு வேகமாகப் பரவி வருவதுமான விஷச்செடி 'பார்த்தினியம்' அதில் பாதிக்கு மேல் கலந்திருந்தது. எச்சரிக்கை செய்யவே இதை எழுதுகிறேன்

—ரமணி ரங்கநாதன்.

இந்தக் கெடுதல் பண்ணினவங்களை இதுக் குள்ளாரப் பாம்பு பிடுங்கியிருக்க வேணாமா?''

''தெய்வம் நின்று தான் கொல்லும் தம்பி! நம்மை மாதிரி அவசரப்படாது...''

திருமலை பண்டாரத்திற்குப் பதில் எதுவும் கூறவில்லையானாலும் அவர் கூறியதை ஏற்காத பாவனையில் ஏளனமாகச் சிரித்தான். அவன் உணர்வுகளில் ஒருவிதமாக முரடு தட்டிப்போய் இறுக்கம் வந்திருந்தது. பேச்சில் அது புலப்பட்டது.

அவமான உணர்வும், குரோதமும், துவேஷமும், அவனைக் கல்லாக்கியிருந்தன. மற்றவர்கள் ஏற்பதை எல்லாம் விரைந்து மறுக்க வேண்டும் என்பது போன்ற ஒரு வேகத்தை அவனுள் மூட்டிவிட்டிருந்தன. உள்பட்டணத்துப் பெரும் புள்ளிகள் எதை, எதை எல்லாம் உயர்த்தி வழிபட்டுத் தொழுதிருந்தார்களோ அவற்றை எல்லாம் தான் எதிர்த்து அவமானப்படுத்த வேண்டும் போல ஒரு வெறி அவனுள் மூண்டிருந்தது. உள் பட்டணத்தாரின் மரியாதைக்குரியவர்கள் எல்லாம் தன்னால் அவமரியாதைப் படுத்துவதற்குரியவர்கள் என்று அவன் கருதினான். நியதி, நிர்வாகம் எல்லாவற்றையும் ஏற்காமல் எதிர்க்க வேண்டும் என்பது போன்ற ஓர் கூர்மையான 'ஆண்டி — எஸ்டாபிலிஷ்மெண்ட்' உணர்வு அவனுள் முற்றியிருந்தது. தன் பிறவியிலேயே அவமானப் பட்டத்தைச் சேர்த்து ஒட்டவைக்க விரும்பும் அந்த கிருஷ்ணராஜ உடையார் தங்கமும், வைரமுமாய் மின்னும் மகாராணியான அவன் தாய், அவர்கள் கும்பிடும் அநுமார், பெருமாள், அர்ச்சகர், புரோகிதர் அனைவருமே எதிரிகளாக அவன் கண்ணுக்குத் தோன்றினார்கள். கோவில், குளம், தர்மம், நியாயம், மரியாதைகள், பழக்கவழக்கங்கள், பண்டிகை, திருவிழாக்கள், எல்லாமே தன் போன்ற அநாதைகளை எப்போதுமாக ஒடுக்கி வைக்க ஏற்பட்ட நிரந்தரச் சதித் திட்டங்

களாக அந்த விநாடியில் அவனுக்குத் தோன்றின.

அந்த ஆண்டின் பிள்ளையார் சதுர்த்தி தினத்தன்று நந்தவனத்துக்குள்ளிருந்த 'பூங்காவன விநாயகர்' கோவிலில் பண்டாரம் பொங்கல் படையல் எல்லாம் செய்தபோது—சண்பகம், பண்டாரத்தின் மனைவி, மகன் எல்லோருமே விழுந்து கும்பிட்டுத் திருநீறு வாங்கிப் பூசிக் கொண்டார்கள். திருமலை மட்டும் கும்பிட்டு விழவுமில்லை. திருநீறு வாங்கிப் பூசிக்கொள்ளவுமில்லை.

''தப்பா நெனைச்சுக்காதீங்க... இதெல்லாம் எனக்குப் பிடிக்கலே... இந்த வழக்கத்தை நான் விட்டாச்சு... இந்த ஜமீன் உப்பைத் தின்னு தின்னு இங்கே கிடக்கிற சாமி, பூதங்களும், நல்லது கெட்டது தெரியாமல் புத்தி கெட்டுத் தடுமாறிப் போச்சு.''—

பண்டாரம் அவனை வற்புறுத்தவில்லை. சண்பகம் அவனை விநோதமாகப் பார்த்தாள். பண்டாரத்தின் மனைவி அவனை அருவருப்பாக நோக்கினாள். பண்டாரத்தின் மகன் அவனைக் கேட்டான்:

''என்ன? நீங்களும் நம்மூர் மருந்துக்கடை அண்ணனோடச் சேர்ந்தாச்சா?''

''இதுவரை இல்லே! ஆனால் அந்த அண்ணனைச் சீக்கிரமே பார்ப்பேன் என்று தோன்றுகிறது'' என்றான் திருமலை. வெளிப்பட்டணத்தில் 'இங்கர்சால் மருந்தகம்' என்ற பெயரில் மருந்துக்கடை வைத்திருந்த பொன்னுச்சாமி என்பவர், ''கடவுள், மதம், என்பதெல்லாம் ஏமாற்று வேலை. அறிவும், சிந்தனையுமே மனிதனின் உயர் ஆற்றல்கள்'' என்று பேசி வந்தார். ஊரில் மருந்துக்கடை அண்ணன் என்று அவருக்குப் பேர் ஏற்பட்டு வழங்கி வந்தது. அவரைக் குறிப்பிட்டுத் தான் பண்டாரத்தின் மகன் திருமலையை விசாரித்திருந்தான்.

பிள்ளையார் சதுர்த்தி கழிந்த இரண்டு மூன்று தினங்களில் திருமலை கூறிய இன்னொரு செய்தி பண்டாரத்தையும் அவர் குடும்பத்தாரையும், ஆச்சரியத்துக்கும் அதிர்ச்சிக்கும் உள்ளாக்கியது.

''தேரடியிலே இளநீர்க் கடை போடப் போறேன். இளநீர் மட்டுமில்லே... தேங்காய் பழம், பூ, சூடம், ஊதுபத்தி, வெற்றிலைப் பாக்கு எல்லாம்தான் விற்கிறதாய் உத்தேசம்...''

''சாமி பூதம் இல்லேங்கறே... அநுமார் கோவிலுக்கும், பெருமாள் கோவிலுக்கும் போற சனங்க உன்னை நம்பிக் கடைக்குப் பண்டம் வாங்க வரணுமே தம்பீ? அது எப்பிடி...?''

''எனக்குச் சாமி பூதத்துலே நம்பிக்கை இல்லே! ஏமாத்தாமே, கொள்ளை விலை வைக்காமே நியாயமா நான் தேங்காய் பழம் வித்தா வாங்கறவங்க வாங்கட்டும்.... பிடிக்காதவங்க போகட்டும்...''—

''உன் பட்டணத்து ஆளுங்க கெடுதல் பண்ண மாட்டாங்களா தம்பீ!''

''யாருடைய கெடுதலுக்கும் நான் பயப்படலே! என்னை எவனும் அசைக்க முடியாது.''— (தொடரும்)



## அருள் வாக்கு

பரோபகாரம் சித்த சுத்திக்கு உதவ வேண்டுமானால் அதற்கு உயிர்நிலை அஹங்காரம் என்பது லவலேசம் கூட இல்லாமல் தொண்டு செய்வது தான். 'நாம் பெரியவர்; உபகாரம் பண்ணுகிறோம்' என்ற நினைப்பைத் தலையெடுக்க விடக்கூடாது. கொஞ்சம் அப்படி நினைத்தாலும் அது உபகாரம் பண்ணுவதன் பலனை — சித்த சுத்தியை — சாப்பிட்டு ஏப்பம் விட்டுவிடும். இரண்டாவது (அதிலேயே இதுவும் அடக்கம்தான்.) பிரதி பிரயோஜனத்தைத் துளிக் கூட எதிர்பார்க்கக் கூடாது. உபகாரம் செய்வதால் நமக்கு விளைகிற சித்த சுத்தியேதான் பெரிய பிரயோஜனம்.

அவரவரும் தம் நிலையில் தம் வருமானம் குணம் சரீரவசதி ஆற்றல் இவைகளுக்கு ஏற்றபடி எவ்விதங்களில் பரோபகாரம் செய்ய முடியுமோ அப்படியெல்லாம் செய்ய வேண்டும். உடம்பிலே எந்த அவயவத்துக்குத் துன்பம் வந்தாலும் கண் அழுகிறது அல்லவா? அதைப் போல் உலகத்தில் எங்கே யாருக்குத் துன்பம் உண்டானாலும் நாம் மனம் கசிந்து ஒவ்வொருவரும் நம்மாலான உதவியைச் செய்ய வேண்டியது நம் கடமை. இதில் பெருமைக்காகச் செய்வது எதுவும் இல்லை. பிறத்தியாரின் வற்புறுத்தலுக்காகவும் செய்ய வேண்டியதில்லை. லோகம் முழுக்க பகவத் ஸ்வரூபம் என்று மனசில் வாங்கிக் கொண்டால் தன்னால் ஸ்வபாவமாகப் பிறர் துயரத்தை நிவிருத்தி செய்வதில் ஈடுபடுவோம். இதிலே நமக்குச் சிரமம் வந்தால் கூட அது சிரமமாகவே தெரியாது. எத்தனை தியாகம் செய்தாலும் அதுவே பரமானந்தமாக இருக்கும். இப்படி தியாகம் பண்ணுவதற்கு எல்லையே இல்லை. உபசரிக்கப்பட்டவன் முகத்தில் மகிழ்ச்சி தவழப் பார்க்கிறோமே அந்த ஆனந்தத்துக்கு எத்தனை தியாகமும் ஈடாகாது என்றுதான் தோன்றும்.

—ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்

மென்மையாக நெசவு செய்யப்பட்டது பிரியா* டெரீல்
சேலைகள் — கவர்ச்சிகரமான டிசைன்களில்
—வசீகர வண்ணங்களில்.
அழகுடன் தழுவிடும் அருமையான சேலைகள்.



# தாவண்கெரே

**எடுப்பான கலப்பழகுடன் மிடுக்கான பாணி அமைக்கிறது.**

**தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.**
ஹனுமந்தப்பா கட்டிடம்,
சித்ரதுர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

*டெரீன்—CAFI-இன் ரிஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்

THOMAS/8303-B/TAM

# அலைகள்



வெண்ணிலவன்

''ஆஷாதேவி வீடு எது?'' என்று யாரோ கேட்பது என் காதில் விழுந்தது. நான் பரபரப்போடு ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன்.

தெருவில் ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான். எதிர் வீட்டுச் சிறுமி என் வீட்டை அடையாளம் காட்டிக் கொண்டிருந்தாள்!

'யார் இந்த வாலிபன்? எதற்காகத் தேடி வந்திருக்கிறான்? ஒருவேளை பதிப்பகத்துக்காரர்கள் அனுப்பியிருப்பார்களோ?' நான் என்னைச் சரி செய்து கொண்டு வரவேற்பு அறைக்கு வந்த போது –



இருபத்து ஐந்து வயதிருக்கும் அவனுக்கு. கிராப்புமுடி அபரிமிதமாய்த் தொங்கிக்கொண்டிருந்தது. நல்ல சிவப்பு. தீட்சண்யமான கண்கள். சபாரி அணிந்திருந்தான். முகத்தில் ஒரு கல்லூரி மாணவனின் சாயலிருந்தது.

''யார் நீங்கள்? என்ன வேண்டும்?'' என்று கேட்க நான் தயங்கிக் கொண்டிருந்த போது அவன் பணிவான குரலில் என்னைக் கேட்டான்.

''நாவலாசிரியை ஆஷாதேவி நீங்கள் தானே?''

''ஆம்!'' என்றேன் நான். புகழுக்கு அடிமையாகாதவர் யார்? நான் பெருமையில் கொஞ்சம் குளிர்ந்து போனேன்.

''நான் அனைத்துக் கல்லூரி மாணவர் மன்றச் செயலாளர். என்னுடைய பெயர் அனந்த்'' – அவன் அறிமுகப்படுத்திக்கொண்டான். ''எங்கள் ஆண்டுவிழாவுக்காகப் பட்டிமன்றம் ஏற்பாடு பண்ணியிருக்கிறோம். வரதட்சணைக் கொடுமைகளுக்குக் காரணம் தனி மனிதனே இல்லை சமுதாய அமைப்பே என்பது தலைப்பு. நீங்கள் கட்டாயம் கலந்து கொள்ள வேண்டும்.''

அந்த இளைஞன் தன் டயரியைப் பிரித்து இளஞ்சிவப்பு நோட்டுகளை என்னிடம் தந்

தான். வரதட்சணைக் கொடுமைகளுக்குக் காரணம் தனி மனிதனே என்ற அணியில் என் பெயர் இருந்தது.

என்னுடைய மனத்தில் மெல்லியதாய்க் கோபம் பிசிர் அடித்தது. 'என்ன முறை இது? நோட்டீஸ் அடிப்பதற்கு முன்னால் என் அனுமதியைக் கேட்டிருக்க வேண்டாமோ?' ஆனால் நொடிப் பொழுதில் என்னை நானே சமாதானப்படுத்திக்கொண்டேன். 'என்றாலும் பார்மாலிட்டி என்று ஒன்று இருக்கிறதல்லவா?' அதை அவனுக்கு நினைவுபடுத்த விரும்பினேன்.



''என் சம்மதத்தைப் பெற்ற பிறகு நீங்கள் என் பெயரை நோட்டீஸில் போட்டிருக்கலாம்.''

''மன்னிக்க வேண்டும் மேடம். எங்களுக்கு ஒரு நம்பிக்கை. நாங்கள் எடுத்துக் கொண்ட தலைப்பு உங்களை மறுக்க வைக்காது என்று.'' அனந்த் சிரித்தான். அந்தச் சிரிப்பிலிருந்து வந்த பார்வை சற்று ஆழமாய் என் மீது விழுந்தது. என் சங்கடத்தைத் தவிர்த்துக் கொள்வதற்காக நான் ஜன்னலுக்கு வெளியே பார்த்தபடி அவனைக் கேட்டேன்.

''எந்த அடிப்படையில் உங்கள் நம்பிக்கை மிஸ்டர் அனந்த்?''

அவன் நான் எழுதிய நாவல்களை வரிசைப்படுத்திச் சொன்னான்:

''எப்போது வரும் உதயம்? காகித இதயங்கள், கரை சேராத ஓடங்கள் இன்னும் உங்களுடைய பல படைப்புகளை நான் படித்திருக்கிறேன். சீப் பாப்புலாரிட்டி தான் இன்றைய எழுத்தாளர்களின் ஒரே குறிக்கோளாக இருக்கிறது. இதற்காக அவர்கள் தங்கள் எழுத்துக்களை நிர்வாணப்படுத்தி விடுகிறார்கள். பெண் எழுத்தாளர்களையும் சேர்த்துத்தான் சொல்கிறேன். ஆனால் உங்கள் எழுத்துக்கள் ஒரு துருவ நட்சத்திரம். அபலைப் பெண்களின் அடிமை விலங்கொடிக்க வந்த குத்தீட்டி, வரதட்சணை கொடுமைகளை வேரோடு சாய்க்க வந்த கோடாரி...''

அனந்த் என்னுடைய எழுத்துக்களைச் சற்று அதிகமாகப் புகழ்வதாகத் தோன்றியது. அதற்கு முற்றுப் புள்ளி வைப்பதற்காக நான் இடையே குறுக்கிட்டேன்.

''நல்ல வேடிக்கை போங்கள். நீங்கள் போகிற போக்கைப் பார்த்தால் நாவலாசிரியை ஆஷாதேவியின் எழுத்துக்களில் விஞ்சியிருப்பது வரதட்சிணைப் பிரச்னையே—வாழ்க்கைப் பிரச்னையே என்று இங்கேயே பட்டி மன்றம் நடத்தி விடுவீர்கள் போலிருக்கிறதே.''

''ஏன் நடத்தக் கூடாது? மேடம். இரைப்படப் பாடகர் ஜி. எஸ். சங்கரன் பாடல்களில் மக்களை அதிகமாக ஈர்ப்பது பக்திப் பாடல்களா இரைப்படப்பாடல்களா என்றெல்லாம் இப்போது பட்டி மன்றம் நடத்துகிறார்கள். இது நாட்டிற்கு ரொம்பத் தேவை பாருங்கள்!'' அவன் இன்றைய இளைய தலைமுறையினரின் போக்கைச் சாடினான்.

''என்னுடைய நண்பர்கள் உங்கள் ஆஷா தேவிக்கு வரதட்சிணை தவிர வேறு சப்ஜக்ட் தெரியாது என்று விமரிசனம் செய்வதுண்டு. நான் அவர்களை விடுவதில்லை. கடைசி வரை உங்களுக்காக வாதாடுவேன்.''

நான் சிந்தனையில் ஆழ்ந்தேன்.

''வரதட்சிணை சப்ஜக்ட்டைத் தவிர வேறு ஒன்றும் எனக்குத் தெரியாதா? எழுத்து ஒரு தவம். எழுத்தை எழுத்துக்களுக்காக எழுதக் கூடாது. கருத்துக்களுக்காக எழுத வேண்டும். ஒரு எழுத்தாளன் தன்னுடைய படைப்புக்களைச் சிந்தித்துச் சிந்தித்து எழுதி எழுதி அடித்துச் சிற்பங்களாக உருவாக்க வேண்டும். அப்படிப்பட்ட

சிற்பங்கள் நிறைந்த கலைக் கோயிலில் நீதியையும், ஒழுக்கத்தையும் மனிதாபிமானத்தையும் தெய்வங்களாகக் கொலுவிருக்கச்செய்ய வேண்டும்.

''முன்னே வளர்க்க முயற்சிகள் தேவையில்லை. நெல்லை விளைவிக்க உழுது பண்படுத்தி உரமிட்டு நீர்பாய்ச்சி மருந்தடித்து எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது! நீதி நூல்கள் மானிட வரலாற்றில் முடிவு பெறாத தொடர் கதைகள். ஆசையினால் தான் மீண்டும் வரதட்சிணைப் பிரச்னையையே சுற்றிச் சுற்றி வர வேண்டியிருக்கிறது.''

''நிகழ்ச்சிக்கு நீங்கள் கட்டாயம் வந்து விட வேண்டும் மேடம்!''

என் சிந்தனைக் கயிறு அறுந்து போனது.

அனந்த் விடைபெற்றுக் கொள்ள எழுந்தான். என்னுள் இனந்தெரியாத பரபரப்பு ஏற்பட்டது. அவன் போகக் கூடாது. இன்னும் சில மணி நேரங்கள் பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்று மனம் விரும்பியது.

''காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம் அனந்த்'' — நான் அவனை நிறுத்தினேன்.

''காப்பி சாப்பிடுவதில்லை மேடம்'' அவன் மறுத்தான்.

---

பாரீஸிலுள்ள ஒரு ஹோட்டலில் புதிய சேவையொன்று அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது. — ஹோட்டல் விடுதியில் தங்க வருவோர் நாய்களுடன் வரலாம் என்பதே!

அதற்கான விளக்கத்தை வரவேற்பு கூடத்தில் உள்ள அறிவிப்புப் பலகை கூறுகிறது:

''நாங்கள் நாய்களை அனுமதிக்கிறோம். ஏனென்றால் தங்களுடைய பூட்ஸ்களுக்குப் பாலிஷ் போடுவதற்கு நாய்கள் திரைச்சீலைகளை உபயோகிப்பதில்லை. ஹோட்டலில் உள்ள டீஸ்பூன்களை நாய்கள் திருடிச் சேகரிப்பதில்லை. ஹோட்டல் பணிப்பெண்களை நாய் தன்னுடன் உல்லாசப் பயணத்துக்கு அழைத்துக் கொண்டு போய் விடுவதில்லை! இதமான வாடிக்கையாளர்கள் என்ற உணர்வை நாய்கள் எங்களிடம் ஏற்படுத்துகின்றன.

—ஏ. நிர்ச்சலா தேவி.
ஆதாரம்: நியூடைம்ஸ்.



''பால்?''

''பால் என்றதும் உங்கள் பால் நிலா ஞாபகத்திற்கு வருகிறது மேடம்'' அவன் மீண்டும் என் படைப்புக்களைப் பற்றிப்பேச ஆரம்பித்தான். ''படித்துக் கொண்டிருக்கும் போதே நான் அழுது விட்டேன். அத்தனை சோகம். கையிலிருக்கும் எழுதுகோலால் எப்படி உங்களால் கண்ணீர்த் துளிகளைத் கங்கையாக்க முடிகிறது.''

''முடிகிறது. ஆம் எப்படி முடிந்தது?'' அந்த நாவலில் நான் என்னையே கதாநாயகியாக்கியிருப்பது ஒரு காரணம். என் நினைவுகள் கனபரிமாணங்களைக் கடந்து பின்னோக்கிச் செல்கின்றன. சுயவரலாற்றை. சோகங்களை சஞ்சலங்களை அனந்திடம் சொல்லிவிட வேண்டும் என்று இதயம் துடித்தது. ஆனால் தன்மானம் தடுத்ததுஎன்றாலும் சில நிமிடங்களே பழகிய அனந்த் பல ஆண்டுகள் பழகிய அன்னியோன்னியத்தை ஏற்படுத்தி விட்டதால் நான் என் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன்.

''அனந்த்!

பார்ப்பதெல்லாம் மங்கித் தெரிகிற நாற்பது வயதுக் காரியல்ல இந்த ஆஷா அப்போது. வனப்பும், வாலிபமும் மிக்க காலம். பருவத்து வாசலில் அப்போதுதான் இதழ் விரித்திருந்த புதிய ரோஜா. என் தந்தை கடை கணக்குப்பிள்ளை. பொருளாதாரத்தின் கடைசிப் படிகளில் இருந்தது எங்கள் குடும்பம். வரதட்சிணை இல்லை ஒடிக்க ஸ்ரீராமர்கள் முன் வராததால் கன்னியர்களாகவே காலங்கடத்திக் கொண்டிருக்கும் சீதைகளில் நானும் ஒருத்தி.

ஏழைகளுக்கு வேலை என்பது பாலைவனச் சோலை. அச்சகம் ஒன்றில் அச்சுக் கோப்பவளாகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். அஞ்சாறு பெண்ணைப் பெத்தா அரசனும் ஆண்டி என்பார்கள். என் தந்தை ஐந்து பெண்களைப் பெற்றுக் கொள்வார் என்ற தீர்க்கதரிசனத்தாலோ என்னவோ அவருடைய தாய், தந்தையர் அவருக்குப் பொருத்தமான பெயரை வைத்திருந்தார்கள். என்னுடைய தந்தையின் பெயர் பழனியாண்டி. ஏழைக் குடும்பத்தில் பிறந்திருந்தாலும் பெண்ணாய்ப் பிறந்து விட்டால் கன்னி கழிந்தாக வேண்டும். எப்படியோ என் தந்தை தரகர் மூலமாக ஒரு மாப்பிள்ளையை நிச்சயித்தார். 'ஐயாயிரம் வரதட்சணை. ஐயாயிரத்தை என் தந்தையின் கடை முதலாளி கடனாகத் தருவதாக ஒத்துக் கொண்டார். ஆனால் அதை உடனே கொடுக்க முடியாது. கல்யாணம் முடிந்து ஒரு மாதத்தில் தந்து விடுகிறேன் என்று அவர் நேரடியாக மாப்பிள்ளையிடம் வாக்குக் கொடுத்ததன்பேரில் என் கழுத்தில் தாலி ஏறியது. என் துர் அதிர்ஷ்டம் வியாபாரத்தில் ஏற்பட்ட திடீர் நஷ்டத்தின் காரணமாக அந்த முதலாளி இன்சால்வென்சி கொடுத்துவிட்டுத் தலைமறைவாகிப் போனார். என் தந்தைக்கு வேலையில்லாமல் போனது.

தன்னை எல்லோரும் சேர்ந்து ஏமாற்றி விட்டதாக என் கணவர் கொஞ்சம் கூட இரக்கம் இல்லாமல் என்னைப் பிறந்த வீட்



கர்னுடக பல்கலைக் கழகத் துணை வேந்தர் சம்பத்தில் தமக்குத்தாமே ரூ. 100 அபராதம் விதித்துக் கொண் டார்! காரணம், ஒரு மாணவனுக்கு இவர் தவருக அபராதம் விதித்துவிட் டாராம்! தம் தவற்றை இருநாட்கள் கழித்து உணர்ந்தார்! பிராயச்சித்த மாகத் தமக்குத்தாமே அபராதம் விதித்துக் கொண்டார்.

ஆதாரம்: சண்டே.
—சம்பத்குமாரி.

---

டில் கொண்டு வந்து விட்டுவிட்டு ஐயாயி ரத்தை ரெடி பண்ணினப்புறம் லெட்டர் போடுங்கள். 'வர்றேன்' என்று போய்விட் டார். ஒரு நூறு ரூபாய் நோட்டை முழு தாகப் பார்த்தறியாத ஜீவனம் எங்க ளுடையது. ஐயாயிரம் ரூபாய்களுக்கு எங்கே போவது? நான் வாழாவெட்டியாக, என் தங்கைகளும் பூதாகாரமான பிரச்னையாக— வாழ வழியில்லாதவர்களுக்கு வறுமை தரும் தீர்ப்பு தற்கொலைதானே!

என் தந்தை என் நாலு தங்கைகளுக்கும் விஷம் கொடுத்து விட்டுத் தானும் சாப் பிட்டு விட்டுக் கண்ணை மூடிவிட்டார். எனக்கும் அவர் அந்த விஷத்தைக்கொடுத் திருக்கலாம். இரட்டைக் கொலை பாவம் என்று நினைத்தாரோ, என்னவோ? ஆம் அப்போது என்னுள் இன்னொரு உயிர் வளர்ந்து கொண்டிருந்தது. இடிவிழுந்தாற் போல இன்னொரு செய்தி. என் கணவர் இன்னொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டார் என்பது.

கோர்ட்டுக்குப் போகவோ, ஊரைக் கூட்டி நியாயம் கேட்கவோ, எனக்குச் சக்தி யில்லை. ஏனென்றால் நான் தான் யாரும் இல்லாத அனாதையாகப் போனேனே!

ஒரு பெண் யாருடைய துணையும் இல்லா மல் இந்தச் சமூகத்தில் வாழ முடியும் என்று இந்த உலகத்திற்கு நிரூபிப்பதற்காக வைராக்கியத்தோடு வாழ ஆரம்பித்தேன். வாழ்கிறேன்.''

**எ**ன் கதையைச் சொல்லி முடித்த பின் னும் அனந்த் மௌனமாய் உட்கார்ந்திருந் தான் பின் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான்.

''திருமணம் சொர்க்கத்தில் நிச்சயிக்கப் படுகிறது என்கிறார்கள். ஆனால் அந்த சொர்க் கத்திற்கு வரதட்சணைகளே படிக்கட்டுகளாக அமைந்திருக்கின்றன. பெண்களுக்குப் பொரு ளாதார விடுதலை வேண்டும். அப்போது தான் அவர்கள் எல்லா வகையான சுதந்திரங்களையும் அடைய முடியும். பஸ்ட் ஆஃப் ஆல் இந்த முதலாளித்துவ சமூக அமைப்பை முறியடிக்க வேண்டும் மேடம். எங்கள் அனைத்துக் கல்லூரி மாணவர் மன் றம் அகில இந்திய வரதட்சிணை ஒழிப்பு இயக்கம் என்று ஒரு அமைப்பை ஏற் படுத்தப் போகிறது. அதற்கு நான்தான் செயலாளராக இருக்க வேண்டும் என்று நண்பர்கள் வற்புறுத்துகிறார்கள். முதல்கட்ட மாக 'வரதட்சணை வாங்க விட மாட்டோம்' என்று உறுதிமொழி எடுத்து ரத்தத்தில் கை யெழுத்திட்டு அதைப் பாரதப் பிரதமர் இந்திராகாந்தி அவர்களுக்கு அனுப்பி வைக்கத் திட்டமிட்டிருக்கிறோம்.''

அனந்த் சொல்லும் பொழுதே எனக்குப் புல்லரித்தது. இளைய தலைமுறையின் விடி வெள்ளியாய் அவன் என் கண் முன் மின்னி னான். இவனைப் போல ஒரு புரட்சிக்காரனை மனிதாபிமானமுள்ளவனைத்தானே நாம் தேடிக் கொண்டிருந்தோம்! ஓ! இதோ கிடைத்து விட்டான். என் உள்ளத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் குதூகலம் பொங்கி யது. காபி சாப்பிடச் சொன்னதுமே மறந்து விட்டதே. நான் மகிழ்ச்சியோடு 'லட்சுமி' என்று உள்ளே குரல் கொடுத் தேன்.

லட்சுமி காப்பி கொண்டு வந்தாள்.

நான் அனந்த்துக்கு அவளை அறிமுகப் படுத்தினேன்.

''இவள் என் மகள். ப்ளஸ் டூ முடித் திருக்கிறாள்.''

''வெரி க்ளாட் மேடம்'' அனந்த் அவளை அளந்தபடியே காப்பியை வாங்கிக் கொண் டான். லட்சுமி உள்ளே போய் விட்டாள்.

''எழுதி என்ன சம்பாதித்து விட முடியும் அனந்த்? லட்சுமியின் கவலைதான் என்னை அரித்துக் கொண்டிருக்கிறது. உங்களுடைய சந்திப்பை என் அதிர்ஷ்டமாகக் கருது கிறேன். உங்களுடைய தாய் தந்தையரை உடனே நான் சந்திக்க வேண்டும். ஒருநல்ல நாள் பார்த்து அவர்களை இந்த வீட்டிற்கு வரச் சொல்ல வேண்டும். உங்கள் முகவரி யைச் சொல்லுங்கள்.''

அனந்த்தின் விழிகள் வியப்பால் விரிந் தன. இப்படி ஒரு திருப்பத்தை அவன் எதிர்பார்க்கவில்லை போலும்.

''முகவரிதானே — வித் ப்ளஷர். சொல் கிறேன் மேடம்!'' அவன் சொன்னான் ஒரு சின்னப் புன்னகையோடு!

''இருங்கள்! என் டயரியில் குறித்துக் கொள்கிறேன்'' நான் படிப்பறைக்கு ஓடி னேன். எனக்குக் காற்றில் மிதப்பது போல இருந்தது. எண்ணற்ற கற்பனைகளில் இதயப் பறவை சிறகடித்தது. லட்சுமிக்குத் துணையாக ஒரு லட்சியவாதி. நான் கனவு கண்டது போல; காலை நட்சத்திரங்களுக்குப் பின்னால் வரும் கதிரவனின் ஒளிக்கிரணங் களைப் போல. லட்சுமிக்கு இப்படி அதிர்ஷ் டம் கிட்டும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை.

நான் உள்ளத்து மகிழ்ச்சியின் உச்சக்கட் டத்தில் நின்றவளாய்டயரியோடு ஹாலுக்குத் திரும்பிய போது திடுக்கிட்டுப் போனேன்.

அனந்த் அங்கு இல்லை!

தெய்வ தரிசனம்

# காரணங் கடந்த காரணீச்வரர்



✕ நடராஜர்

புகழ் வாய்ந்த மயிலைக் கபாலீசுவரர் கோவிலைச் சுற்றி எத்தனையோ கோவில்கள் இருக்கின்றன. அவற்றில் திருமயிலைத் தல புராணம் ஏழு முக்கியமான சிவன் கோயில்களைக் குறிப்பிடுகிறது. அந்தக் காலத்தில் இவை மயிலை நகரின் எல்லையாக இருந்திருக்கலாம். அவற்றில் ஒரு தொன்மையான கோவில் காரணீச்வரர் திருக்கோயில்.

இன்று என்ன நாள்? ஏதாவது விசேஷமுண்டா? ஏகாதசி, பிரதோஷம், பௌர்ணமி, திருவாதிரை ஏதாவது ஒன்றுமில்லையா? பரவாயில்லை. ஒரு காரணமும் இல்லாமலேயே இன்று காரணீச்வரரைத் தரிசனம் செய்து விடுவோம் என்று தீர்மானித்துக் கொண்டு மாலை 6 மணிக்கு மேல் ஆகி விட்டதையும் பொருட்படுத்தாமல் மன உந்துதல் ஒன்றே காரணமாகக் கிளம்பிவிட்டேன். திருமாட மயிலையில் வடக்கு மாடவீதி வரை வந்த பின்னரே காரணீச்வரர் கோவில் இருக்குமிடம் சரியாகத் தெரியாது என்று நினைவு வந்தது. சற்று நிதானித்து, கோவில்களுக்கும் பூஜைக்கும் உரிய சுத்தமான பொருள்களைத் தயாரித்து அருந்தொண்டு செய்துவரும் ஸ்ரீவித்யா உபாஸக நிலையத்தை அடைந்து விசாரித்தேன். அங்கிருந்த இரண்டு இளைஞர்களும் மாற்றி, மாற்றி வழி சொன்னார்கள். "இதோ இந்தச் சந்து வழியாகப் போய் கச்சேரி ரோடில் கிழக்காகத் திரும்பி இடதுபக்கம் போய் வலது பக்கம் திரும்பி...." என்று வழி சொன்னபோது.... 'சரி' இன்று கபாலீச்வரரை தரிசனம் செய்து கொண்டு போய் விடுவோம். இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம் என்று மனத்தில் நினைத்துக் கொண்டேன்.

அந்த சமயத்தில் ஒரு முதியவர் கையில் இரண்டு தேங்காய்களுடன் வந்தார். வழி சொல்வதை நிறுத்திவிட்டு அந்த இளைஞர் "இவங்களுக்குக் காரணீச்வரர் கோவிலைக் காட்டுகிறீங்களா?" என்று கேட்டார். அவர் தலையை ஆட்டிவிட்டு "அங்கே ஒண்ணும் கிடைக்காது. தேங்காய் பழம் வாங்கிடுங்க" என்றார். மகிழ்ச்சியோடு நிலையத்திலேயே சுத்தமான கற்பூரம் ஊதுவத்தி குங்குமம் வாங்கிக் கொண்டு தேங்காய், பழம், புஷ்பம் எடுத்துக் கொண்டு கிளம்பினேன்.

இரண்டு மூன்று சின்ன யார் கோவில்களைச் சுற்றிக் கொண்டு இப்படியும் அப்படியும் திரும்பிய பிறகு "அதோ! அதுதான் கோவில்" என்றார் முதியவர். கோவில் இருப்பது சட்டென்று புலப்படவில்லை. ராஜகோபுரமாக இருந்தபடியால் அதாவது வாசல் கதவுகள் உள்ள நிலை மட்டும் கட்டப்பட்டு ராஜகோபுரம் கட்டாத கோவிலாதலால் ஏதோ மடம் போல தோன்றுகிறது. நன்றாக இருட்டிவிட்டபடியால் அருகில் சென்ற பிறகுதான் பலி பீடமும் நந்தி பகவானும் புலப்பட்டன. கொடிக் கம்பமும் காணப்படவில்லை. மண்டபத்தில் சில பக்தர்கள் அமர்ந்து திருப்புகழ் பாடுகிறார்கள். வெளியே விரித்த ஜமக்காளத்தில் அமர்ந்து சிலர் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

சுவாமியைத் தரிசனம் செய்யும்போதே எதிரில் ஜகன் மாதாவான பொற்கொடியாளும் காட்சி தருகிறாள். சுவர்ண லதாம்பிகையாக நீல வண்ணப்பட்டு அணிந்து பேரழகுடன் பொன்




✕ ராஜகோபுரம்



✖ சந்திரசேகரர்



✖ அஸ்திர தேவர்

மின்னல் கொடி தவழ்வது போல் மல்லிகை மாலையும், புன்னகையுமாகச் சிறு பெண்ணாகவே காட்சியளிக்கிறாள்.

பிரதக்ஷிணம் செய்யும் போது கோஷ்டத்தில் உள்ள ஞானகுருவின் முன்பு சற்று தியானித்து விட்டு முருகப் பெருமான் சந்நிதியைத் தேடுகிறோம். சூரக் கொட்டகைதான் கண்களில் படுகிறது. ஒரு சிறு தீபத்தின் ஒளியில் முருகப் பெருமான் காட்சி தருகிறார். ''அடடா அருகில் உள்ள கடாரீச்சரத்தில் சிங்காரவேலனாக அழகுக் கொலு வீற்றிருக்கும் கார்த்திகேயன் இங்குச் சூரக் கொட்டகையிலும் வீற்றிருக்கிறானே!'' என்று நினைத்துக் கொண்டே எதிர்ப்புறக் கோட்டத்தில் காட்சி தரும் திருமாலைத் தரிசித்துக் கொண்டு சண்டிகேசர் சந்நிதியை அடைகிறோம். அது சிதிலமடைந்து இருண்டிருப்பதைக் காண்கிறோம். அவரெதிரே பிரும்ம தேவரும் துர்க்கையும் காட்சி தருகிறார்கள்.

✖ அம்பிகை



பிரதக்ஷிணத்தைை முடித்துக் கொண்டு அர்ச்சகரிடம் தேங்காய்ப் பழத்தைக் கொடுத்து விட்டு நிற்கிறோம். காதுகளில் திருப்புகழும் கண்களில் சிவபூஜையும் மனத்தில் நமது அன்புக்குரியவர்களின் நினைவுமாக நிற்கும்போது தூரத்தில் மேளச் சத்தம் கேட்கிறது. சுவாமிக்குத் தீபாராதனை செய்துவிட்டு அம்பாளுக்கும் அர்ச்சனை செய்கிறார் குருக்கள். வாத்ய கோஷம் நெருங்குகிறது. மண்டபத்திலும் வெளியிலும் இருந்தவர்கள் எழுந்து போகிறார்கள். கற்பூர ஜோதியின் சூடு கண்களில் படும்படி ஒற்றிக்கொண்டு விபூதி குங்குமம் இட்டுக் கொண்டு வாசலுக்கு விரைந்தால் மேனி சிலிர்க்கும் வண்ணம் காட்சி தருகிறார் ஸ்ரீமாதவப் பெருமான் கோவில் கோதண்டபாணி. ஸர்வாலங்கார பூஷிதராய் மக்களைத் தேடிக் கொண்டு ''இதோ வருகிறேன். தரிசனம் செய்து கொள்ளுங்கள்'' என்று சொல்வது போல கோவில் வாசலில் நின்று பக்த கோடிகளுக்குச் சேவை சாதிக்கிறார். பட்டர்பிரான் கற்பூரம் காட்டி புஷ்பம் அளித்துத் திருவடிகளைத் தாங்கியுள்ள சடாரி சாதிக்கிறார். என்ன பாக்கியம் இன்று! சகலத்துக்கும்காரணமாக உள்ள காரணீச்வரர் சந்நிதிக்கு எதிரே எதிர்பாராத அனுக்ரகம். அதுவும் ஸ்ரீராமநவமி உற்சவத்தில் ஈசன் வில்லை முறித்த காட்சி. எதிரே ஜனகமகாராஜர் விசுவாமித்திரர் சீதை மூவரும் வியப்போடு பார்க்க குவித்த கரங்களுடன் ஸௌமித்திரி நிற்க வில்லை ஏந்தி ஈசன் முன்னாலேயே நிற்கிறார். இதை விடப் பரம கல்யாண கோலத்தைக் காண முடியுமா?

ஒரு காரணமும் இன்றி கோவிலுக்குப் போகிறோம் என்று நினைத்தது என்ன மடமை? இப்படி ஈசன் சந்நிதியில் பெருமாள் ஸேவை கிடைக்கவேண்டும் என்ற காரணத்துக்காகத் தான் மனம் உந்தியது. பொற்கொடியாளின் முகத்தில் அரும்பியுள்ள புன்னகை தலைவன் வரவைக் குறித்து எழுந்த மகிழ்ச்சியோ? தில்லையில் கோவிந்தராஜப் பெருமாளையும், கூத்தபிரானையும் சேர்ந்து தரிசிப்பது போல இன்று கிடைத்திருக்கிறது.

ஆரணை முடிமேல் வாழும்
ஆதியே அமலா போற்றி
நாரணன் அயனுந் தேடி
நாடரும் பொருளே
போற்றி;
காரணப் பொருள்கட்
கெல்லாம்
காரணம் ஆனாய்போற்றி;
வாரணம் உரித்துப்
போர்த்த
வள்ளலே போற்றி
போற்றி.

மயிலாக வடிவம் தாங்கி கயிலாய நாதனைப் பூஜித்த சைலேந்திரன் புதல்வி செய்த தோத்திரம். ஆக்கல்

அளித்தல், நீக்கல் எல்லாவற்றுக்குமே காரணகர்த்தாவாக இருக்கும் ஈசனைத் தரிசனம் செய்வதற்கும்வணங்குவதற்கும் ஒரு காரணம் வேண்டுமா என்ன?

கருணை பொழியும் காரணீச்வரர் கோவில் மிகவும் தொன்மையானது என்பதற்குப் பல சான்றுகள் கோவிலில் இருக்கின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அரசாண்ட ராஜேந்திர சோழனின் வம்சத்தில்வந்த குலோத்துங்க சோழமன்னரின் கல்வெட்டும், இன்னும் 12–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுக்களும் இருக்கின்றன. வரலாற்றுப் பெருமைக்காகவே பாதுகாக்கப்பட வேண்டிய கோவில்.

பழம் பெருமை வாய்ந்த இந்தக் கோவிலில் சில அழகிய உற்சவ மூர்த்திகள் இருப்பதையும்காண்கிறோம். ஸோமஸ்கந்தர் படிவமும் முருகப் பெருமானும் ஆடிப் பூர அம்மனும் அழகு பிம்பங்களாகத் திகழ்கின்றனர். சின்னஞ்சிறிய நடராஜ வடிவம். ஈசன் உமையோடு புன்சிரிப்போடு எந்தக் காலத்தில் எந்தப் புண்ணியவான் செய்து வைத்ததோ? பெருமிதத்தோடு கண்ணத்தில் போட்டுக் கொள்கிறோம்.

எல்லா உயிர்களுக்குமே மங்களத்தைச் செய்பவர் சிவபெருமான். அவர் குடி கொண்ட கோவில் பழுதடைந்திருக்கிறது. அதைப் புதுப்பிக்கவும் கும்பாபிஷேகம் செய்யவும் ஒரு திருப்பணிக்குழு அமைக்கப்பட்டு நிதி திரட்டப்பட்டு வருகிறது என்பதை அறிந்து பெரு மகிழ்வு அடைகிறோம்.

''குடமுழுக்குச் சக்கரவர்த்தி'' என்று வாரியார் சுவாமிகளால் புகழப்பட்டுள்ள தவத்திரு குருஜி சுந்தரராம் சுவாமிகளே இந்தக் கோவில் திருப்பணிக்குக் காரண பூதராக இருக்க வேண்டும் என்று திருவுளம் கொண்டிருக்கிறார் காரணீசுவரர்.

சுவாமிகள் ஒரு புதிய விஷயத்தைக் கூறினார். அருள்மிகு கபாலீசுவரர் கோவிலைச் சுற்றி அமைந்துள்ள வெள்ளீசுவரர், மல்லீசுவரர், காரணீசுவரர், விருபாக்ஷீசுவரர், வாலீசுவரர், தீர்த்த கபாலீசுவரர் என்று கூறப்படும் ஆறு கோவில்களும் பெருமை வாய்ந்த சித்தர்களுடைய சமாதிக் கோவில்களாக இருந்தனவென்றும் நாளடைவில் அம்பாளையும் பிரதிஷ்டை செய்து நித்திய பூஜை உற்சவங்களை ஏற்படுத்தினார்கள் என்றும் கூறினார்.

அக்கம் பக்கத்திலிருப்பவர்கள் ''இது நமது கோவில். இதைச் சுத்தமாக வைத்திருப்பது நமது கடமை'' என்ற உணர்வு இல்லாமலிருப்பது ஒரு பெருங்குறை. கோவிலின் பின் பக்கத்தில் குப்பைக் கொட்டிக் கொட்டி மேடாகி இருக்கிறது. ஒரு மாதா கோவிலிலோ மசூதியிலோ குப்பையைக் கொட்ட முடியுமா? அன்பர்கள் சீறி எழ மாட்டார்களா? ஏன் இந்து சமயத்தைச் சார்ந்தவர்களுக்கு மட்டும் மரியாதை உணர்வும் சுயக் கட்டுப்பாடும் இல்லை? இது ஒருபுதிராகவே இருக்கிறது.

ஆனால் சில இளைஞர்கள் மிகவும் சிரத்தையோடு கோவில் பராமரிப்பைக் கவனித்து வருகிறார்கள் என்பது ஒரு புதிய உற்சாகத்தைத் தருகிறது.

கருணைமிகு காரணீசுவரர் கோவிலில் சிறப்பாக நடைபெறுவது பிரதோஷ பூஜை. அன்னை ரத்னமயமான சிம்மாஸனத்தில் அமர்ந்து பார்த்து ரஸிக்க, சகல தேவர்களையும் மகிழ்விக்க ஈசன் நடனமாடும் வேளை பிரதோஷ காலம். தினமும் மாலையில் இருட்டுவதற்கு முன்னால் பிரதோஷ காலமானாலும், துவாதசிக்கும் திரயோதசிக்கும் இடைப்பட்டவேளை மிகவும் புனிதமானது. எல்லாத் தேவர்களும் ஈசன் நடனமாடுவதை காணவந்து கூடுகிறார்கள். சனிக்கிழமையும் சேர்ந்து விட்டால் இன்னும் விசேஷம். ஏப்ரல் 28–ந் தேதி சனிக்கிழமையன்று பிரதோஷ கால பூஜையைக் கண்டுகளித்து காரணீசுவரரின் கருணைக்குப் பாத்திரமாகும் வாய்ப்பு சென்னைவாசிகளுக்கும் குறிப்பாக மயிலைவாசிகளுக்கும் கிடைக்கவிருக்கிறது.

---




அகமதாபாத்திலுள்ள மகன்பாய் என்பவருக்கு ஒரு மாத மின்சாரக் கட்டணமாக 1,59,499 ரூபாய் கட்டும்படி வந்தது. மகன்பாய் எவ்வளவோ முறையிட்ட போதிலும், 'முதலில் பணத்தைக் கட்டிவிட்டுப் பின்பு புகார் செய்யுங்கள். இல்லையென்றால் மின்சார இணைப்பைத்துண்டிப்போம்' என்று மின்சார இலாகா எச்சரித்திருக்கிறது. இத்தனைக்கும் அவருடைய குடியிருப்பு என்னவோ சமையலறையுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரே ஒரு அறைதான்!

–பிளிட்ஸ் இதழிலிருந்து அ. குமார்




கொசுவை விரட்டும், உறுதி பாக—டார்டாய்ஸ்




ஹோமப்புகை போலே... மகிழ்ச்சியும், அமைதியும் தர—டார்டாய்ஸ்




கொசுக்களை விரட்டி"அடிக்க—டார்டாய்ஸ்




பாழும் கொசுக்களை விரட்டி அடிக்க எளிய வழி—டார்டாய்ஸ்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
:.போர்ட், பம்பாய்-400 023. :.போன்: 273831

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ், 7, காசிச் செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32886

# வாசகர் பங்கு

ஒரு வீடு ஒரு மரம், இந்தியனாய் இரு; இந்தியப் பொருளை வாங்கு என்பது போன்ற பல சுலோகங்களை அரசு பிரபலப்படுத்தி வருகிறது. நாமும் பதிலுக்கு அரசுக்குச் சில சுலோகன்கள் வழங்கினால் என்ன? என்று கேட்டிருந்தோம்.

இதோ நேயர்கள் தங்கள் கைவரிசையைக் காண்பிக்கிறார்கள்:



ஜி. எஸ். மதனகோபால், வேலூர்-11

நாளுக்கொரு விலை;
தெருவுக்கொரு சிலை!



இ. தே. இளமுருகன், சென்னை-39.

இலட்சியம் பேசு;
இலட்சங்கள் சேரு!



வி. வித்யா, சென்னை-17.

மந்திரி பேச்சு,
மேடையோட போச்சு!

எம். கோவிந்த்.

பதவியோ லட்
பணமோ நிச்




வி. ராமலிங்கம், கோவை-12.

லட்சத்துக்கு லாட்டரி,
லஞ்சத்துக்கு மந்திரி!






ஆர். சுபா, திருமங்கலம்

ஊழலுக்கு ஒரு கமிஷன்,
கமிஷனுக்கு ஒரு ஊழல்!

முத்துசாமி, அம்பா[illegible].

தேவைக்கேற்ற கூலி;
சக்திக்கேற்ற வேலை!

எல். எம். எஸ். முகமது காசிம்
இளையான்குடி.

லஞ்சமாய்க் கேட்டாலும்
கொஞ்சமாய்க் கேளுங்கள்!

எஸ். எஸ். வாஸன், சென்னை-17

சத்துணவருந்தி சக்திபெறுவீர்;
சாராயமருந்தி சாய்ந்து கிடப்பீர்!



வி. ஜெயலக்ஷ்மி, சென்னை-35

மந்திரிக்குப் பந்துவானால்
மார்க்காவது, மண்ணாவது!




சன்னை-10

ம்:
ம்!

வி. முரளிதரன், விருதுநகர்

கொடுத்தால்தான் லஞ்சம்,
வாங்கினால் அன்பளிப்பு.



ஆ. கருப்பசாமி, குலசேகரன்பட்டணம்

கோப்புக்களை எரிப்போம்,
டேப்புக்களை ஒழிப்போம்!

என். சுதா, விருதுநகர்

இன்றைய நடிகர்
நாளைய முதல்வர்!



கே. வி. கிருஷ்ணய்யர், தஞ்சாவூர்-4.

ஊருக்கு இளைத்தவன்,
ஊழல் செய்யாதவன்!




திருமதி சந்திரசேகரன், திருச்சி.

கவருடன் வந்தால
காரிய சித்தி!




வத்ஸலா முரளிதர், சேலம்

வீட்டுக்கொரு வோட்டு
வோட்டுக்கொரு நோட்டு!



# இதுவும் ஒரு சாதனைதான்

**முகுந்தன்**



**செ**ன்ற வாரம் எல்லாத் தமிழ் தினசரிகளிலும் வெளியான ஒரு செய்தியை உங்களில் எத்தனை பேர் பார்த்திருப்பீர்கள்? பலரது கண்களில் செய்தித் தலைப்பு மட்டும் பட்டிருக்கும். முழுச் செய்தியையும் சிலர் மட்டுமே படித்திருப்பார்கள். எனவே, அந்தச் செய்தியை இங்கே தந்திருக்கிறேன்.

**சினிமா பார்க்கும்போது சாவு**

—மார்ச் 3.

சென்னை மவுண்ட்ரோடில் உள்ள ஒரு சினிமா' கொட்டகையில் நேற்று மாலைக் காட்சியின்போது படம் பார்த்துக்கொண்டிருந்த ஒருவர் திடீரென செத்தார்.

**மாரடைப்பு**

அவரது பெயர் சாமிநாதன். வயது 58. சென்னைக்கு அருகில் உள்ள அம்பத்தூரில் சொந்தத் தொழில் நடத்தி வந்தார். தமது குடும்பத்தினருடன் 'ஜில்ஜில் ரம்பா' என்ற டப்பிங் படத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தார். அப்போது அவருக்கு நெஞ்சுவலி வந்தது. சுருண்டு விழுந்தார். உடனே உயிர் பிரிந்து விட்டது.

திருவல்லிக்கேணி போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்....

சாமிநாதனை நன்கு அறிந்தவன் என்ற முறையில் இந்தச் செய்தி என்னை மிகவும் பாதித்தது. அவன் திடீரென மறைந்து போன வருத்தம் ஒருபுறம்; அவனைப் பற்றி மொட்டையாகத் 'தொழில் நடத்தி வந்தார்' என்று செய்திகள் குறிப்பிட்டதால் தோன்றிய துக்கம் ஒருபுறம். எனவே—

சாமிநாதனுக்கும் சினிமாவுக்கும் உள்ள நெருக்கத்தை விளக்கியே ஆகவேண்டும்.

1936—ஆம் ஆண்டு சுதேசமித்திரன் பத்திரிகை, ஏப்ரல் 8—ம் தேதி இதழைப் புரட்டினால், மூன்றாம் பக்கத்தில் ஒரு செய்தி உங்கள் கண்களில் படும்.

**பயாஸ்கோப்பில் மாது பிரசவம்**
**சென்னப்பட்டணத்தில் நடந்தது.**

மதராஸ், ஏப்ரல் 8—.

நேற்று இவ்வூரில் நவீனமாக அமைக்கப் பட்டுள்ள செயிட்டி பயாஸ்கோப் காக்ஷி சாலையில் ஸ்ரீமதி பொன்னம்மாள் என்ற மாது தம் கணவருடன் பயாஸ்கோப் படம் பார்த்துக் களித்துக் கொண்டிருக்குங்கால், கர்ப்பஸ்திரீயான அவருக்கு இடுப்பு நோவு

ஏற்பட்டு தக்ஷணமே அழகான ஓர் ஆண் பிரஜையை ஈன்றாள். பயாஸ்கோப் காக்ஷி இதனால் சிறிது தடைப்பட்டாலும் கூட, அசம்பாவிதமேதுமேற்படவில்லை.

மேற்படி காக்ஷியின் போது பிரஸன்னமாயிருந்த மெட்ராஸ் கார்ப்பரேஷன் பில் கலெக்டர் மிஸ்டர் அண்ட் மிஸஸ் ஜேம்ஸ் ஃப்ரெடரிக் துரை அவர்கள் ஸ்ரீமதி



பொன்னம்மாளுக்கு வாழ்த்தும் புருஷப் பிரஜைக்கு ரெண்டேகால் ரூபாய் சன்மானமும் செய்வித்தார்....

ஊகித்திருப்பீர்கள். தியேட்டரில் பிறந்த அந்தப் புருஷப் பிரஜை சாமிநாதன்தான்.

கைக்குழந்தையாக இருந்த போது, சாமிநாதனை அவனது தாய், தான் சினிமாப் பார்க்கச் செல்லும் போதெல்லாம் எடுத்துச் சென்று விடுவாளாம். சாமிநாதனேசொல்லியிருக்கிறான் என்னிடம்.

பள்ளிப் பருவத்தில், பிரபல தொழிலதிபர்கள் சிலரைப் போலவே, சாமிநாதனுக்கும் எட்டுப் படிப்பில் புத்தி போகவில்லை. அவன் படித்ததெல்லாம் சினிமாப் பாட்டுப் புத்தகங்களே. மனப்பாடம் செய்ததெல்லாம் 'உனைக் கண்டு மயங்காத பேர்களுண்டோ?'... 'ஞானக்கண் ஒன்று இருந்திடும் போதினிலே' போன்ற சினிமாப் பாடல்களைத்தான் சேகரித்ததோ, சினிமா பிட்-நோட்டீஸ்களே.

படிப்பு ஏறவில்லை என்றதும், அவனது தந்தை அவனை ஓர் இடத்தில் — கரெக்ட், சினிமா கொட்டகையில்தான் கொண்டுபோய் வேலைக்குச் சேர்த்து விட்டார். நாலே மூக்காலணா (இன்றைய கணக்குப்படி 29 பைசா) வகுப்பில் டிக்கெட் கலெக்டர்.

அந்த உத்தியோகத்தில் சாமிநாதனால் அதிக நாள் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அவன் மையல் கொண்டிருந்த ராஜாம்பாள்

என்ற பெண்ணை, டிக்கெட்டில்லாமல் அவ்வப்போது படம் பார்க்க அனுமதித்து வந்ததற்காக, கையும் களவுமாகப் பிடிக்கப்பட்டு, வெளியே தள்ளப்பட்டான்.

சாமிநாதன் வேலை பார்த்த கொட்டகை முதலாளி நல்ல பலசாலி. ஆகவே, சாமிநாதனை அவர் வெளியே வீசிய வேகத்தில் அவன் நேராக ஒரு சினிமா ஸ்டுடியோ வாசலில் போய் விழுந்தான்.

விதி அப்போது கச்சலாய், நெட்டையாய், ஏராளமான பணத்துடனும் மண்டையில் விசாலமான வெற்றிடத்துடனும் கருப்பண்ணன் என்ற பெயரில் அந்த ஸ்டுடியோவுக்குள் நுழைந்து கொண்டிருக்கவே, சாமிநாதனின் வாழ்க்கையில் ஒரு மகத்தான திருப்பம் ஏற்பட்டது.

கருப்பண்ணன் பர்மாவில் சொந்தமாகக் காசுக்கடை நடத்தி, ஏராளமாகப் பணம் சேர்த்து எப்படிச் செலவழிப்பது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தார். சினிமா விநியோகத்துறையில் நிறையக் காசு பண்ண முடியும் என்று யாரோ சொல்லவே அதில் கால் வைத்திருந்தார். அது சம்பந்தமாகப் படத் தயாரிப்பாளர் ஒருவரைச் சந்திக்க ஸ்டுடியோவுக்கு வந்தபோதுதான், சாமிநாதன் அவரது கண்ணில் பட்டான்.

முதலில் எடுபிடியாக அவரிடம்வேலைக்குச் சேர்ந்து, படிப்படியாக முன்னேறிய சாமிநாதன், எட்டு வருடங்களுக்குப் பிறகு கருப்பண்ணு பிலிம் சர்க்யூட்டின் மானேஜரானான். பிலிம் டப்பாக்களைச் சுமந்து கொண்டு அடிக்கடி வெளியூர் போய் வந்தான். கையில் நிறையப் பணம் புரண்டது. 'முதலாளிதான் ஏற்கெனவே நிறையப்பண மூட்டைகளைச் சுமந்து கொண்டிருக்கிறாரே... அவரை மேலும் சுமக்க வைப்பானேன்'' என்ற நல்லெண்ணத்தில் கொஞ்சம்போலப் பணத்தை ஒதுக்கிக் கொண்டு வெளியே வந்தான் சாமிநாதன். கருப்பண்ணன் வெறுப்பண்ணனாகி, ''சாமிநாதன் என்ற நபருடன் வாடிக்கையாளர்கள் இனி வைத்துக்கொள்ளும் நடவடிக்கைகளுக்குக் கருப்பண்ணு பிலிம் சர்க்யூட் எந்தப் பொறுப்பையும் ஏற்காது. அவருடன் ஒப்பந்தம் செய்து கொள்ளும் நபர்கள், தமது சொந்தப் பொறுப்பில் செய்து கொண்டதாகவே கருதப்படுவார்கள்' என்று 'எச்சரிக்கை' விடுத்தார் விளம்பரங்கள் மூலம்.

சாமிநாதனின் அதிர்ஷ்டச் சக்கரம் சுழல ஆரம்பித்து விடவே, கருப்பண்ணனின் எச்சரிக்கை, எடிட்டிங்கின் போது வெட்டப்பட்ட ஷாட் போல் குப்பைக் கூடையில் ஒதுக்கப்பட்டது.

சாமிநாதன் தன்னைப் போலவே இன்னொரு கம்பெனியிலிருந்து பணத்துடன் வெளியே வந்திருந்த திருமலை என்பவருடன் கூட்டு சேர்ந்து, பட விநியோகக் கம்பெனியை ஆரம்பித்தான். முதலில், பெரிய பட முதலாளிகள் யாரும் இவர்களைச் சீந்தவில்லை. எனவே, வாங்குவதற்கு ஆளில்லாமல் டப்பாவில் முடங்கிக் கிடந்த திரைப்படங்களே விநியோகத்துக்குக்கிடைத்தன. அந்தப் படங்கள் சுமாராக ஓடி விடவே, டப்பாக்களை அடுக்கி வைத்திருந்த தயாரிப்பாளர்கள் எல்லோரும் சாமிநாதனை நாடி வரத் தொடங்கினார்கள். சாமிநாதனின் கை ஓங்க ஆரம்பித்தது. எப்பேர்ப்பட்ட சொத்தையையும் விளம்பர சாமர்த்தியத்தால் ஓட்டிக் காட்டினான் சாமிநாதன்.

அந்தஸ்து என்கிற குறுகலான ஏணிப் படிகளில் இரண்டு பேராகச் சேர்ந்து ஏறுவது கஷ்டமானது என்பதால், சாமிநாதன் தனது கூட்டாளியான திருமலையைப் பிடித்துக் கீழே தள்ளினான். திருமலை கம்பெனியை விட்டு வெளியேறியதும், பழைய முதலாளி கருப்பண்ணனை நினைவு கூர்ந்தான் சாமிநாதன் — திருமலையுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தங்கள் தன் கம்பெனியைக் கட்டுப்படுத்தாது என்று விளம்பரம்போட்டு.

பட விநியோகத்துடன் நின்று விட சாமிநாதன் தயாராக இல்லை. படம் தயாரித்து விற்பதில் இன்னும் நிறையப் பணம் பண்ண முடியும் என்று தன் அனுபவத்தில் தெரிந்து கொண்டிருந்தான். எனவே, அந்தத் துறையிலும் கால் வைத்தான்.

அவனது முதல் படத்தின் ஷூட்டிங் பத்துநாள் தொடர்ந்து நடந்து முடிந்ததும், படத்தின் டைரக்டரைக் கூப்பிட்டான்.

''இதுவரைக்கும் எடுத்த ஸீன்களை நாளையிலிருந்து நீங்கள் திரும்பவும் ஷூட் செய்தாக வேண்டும்'' என்றான்.

''ஏன்...?' எடுத்த வரைக்கும் நல்லாகத் தானே வந்திருக்கிறது? ரஷ் போட்டுப் பார்த்தபோது கூடப் பாராட்டினீர்களே''

''அது ,வாஸ்தவம்தான்... ஆனால் கதாநாயகியை மாற்றி விடுங்கள்... சரோஜா இனிமேல் படத்தில் நடிக்க மாட்டாளாம்.''

''ஏன்? என்னவாம் கேடு அவளுக்கு... நெல்லூரிலிருந்து வரும்போது, ஒப்புக் கொண்டுதானே வந்தாள்...? அவளைச் சும்மா விடக் கூடாது... கேஸ் போட்டு நஷ்டஈடு வாங்கணும்...'' என்று பதறிப் பட்டார் டைரக்டர்.

''அதெல்லாம் எதுவும் தேவையில்லை... நான் சொன்னபடி செய்யுங்கள்...''

இரண்டு நாள் கழித்துத்தான் டைரக்டருக்கு விஷயம் புரிந்தது: சாமிநாதன் சரோஜாவை மணந்து கொண்டு விட்டான்.

அவன் சரோஜாவை மணந்து கொண்டதற்கு வேறு ஒரு முக்கியமான காரணமும் இருந்தது. பட விநியோகம் — தயாரிப்பு என்ற இரண்டு துறைகளில் அவன் கால் வைத்திருந்தான். இரண்டு பங்களாக்களை வாங்கிப் போட்டிருந்தான். சொந்த உபயோகத்துக்கென இரண்டு கார்கள் இருந்தன. இப்படி அநேகமாக எல்லாமே இரட்டையாக இருக்கும்போது, ஒரே ஒரு மனைவி என்பது சௌரவக் குறைச்சலாகத் தோன்றியது. அந்த எண்ணம் மனத்தில் வேர் பிடிக்கவும், சரோஜாவின் கண்வெட்டும், சட்டுடலும் அவனைக் கவர்ந்திழுக்கவும்... அவளிடம் சரணாகதியாகி விட்டான்.

சொந்தப் படம் எடுத்து முடித்தவுடன், விநியோகஸ்தர்களுக்குத் தனித்தனியே படத்தைப் போட்டுக் காட்டினான். ஏரியா விற்பனையிலும் மற்றவர்கள் யாரும் செய்

யாத ஒரு காரியத்தைத் தான் செய்ய வேண்டுமென்று தோன்றவே ஒவ்வொரு ஏரியாவையும் இரண்டிரண்டு ஆசாமிகளுக்கு விற்பனை செய்து, புதியதொரு சாதனையை நிகழ்த்தினான் பத்திரிகைகளில் அந்தந்த விநியோகஸ்தர்கள் 'செங்கல்பட்டு, வட ஆற்காடு; தென் ஆற்காடு என்னுடையதுதான்'. 'மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி மீது எவனும் கைவைக்க முடியாது' என்றெல்லாம் விளம்பரங்கள் மூலம் கூப்பாடு போட்டுக் கொண்டிருக்கும்போது, சாமிநாதன் இந்த மண்ணிலேயே இருக்க வேண்டாமென்று சிங்கப்பூரில் சரோஜாவுடன் ஜாலியாகச் சுற்றிக் கொண்டிருந்தான்

முதல் படம் சக்ஸஸ். எனவே, அதைத் தொடர்ந்து இரண்டு படங்களுக்குப் பூஜை போட்டான். ஏற்கெனவே சூடுபட்டிருந்த விநியோகஸ்தர்கள் நெருங்கவில்லை. எனவே, சொந்தப் பொறுப்பில் படங்களை ரிலீஸ் செய்தான். படங்கள் ஏகோ என்று ஓடவே, ஒதுங்கியிருந்த விநியோகஸ்தர்கள் பழையபடி 'அண்ணே' என்று உறவுமுறை கொண்டாடிக் கொண்டு வந்து ஒட்டினார்கள்.

அவர்களிடமிருந்த பணத்தை வாங்கி, அடுத்த படத்தை எடுத்தான் சாமிநாதன். படம் வசூலை அள்ளிக் குவிக்கவில்லை என்றாலும், கையைக் கடிக்காமல் விட்டதால் விநியோகஸ்தர்கள் முகம் சுளிக்கவில்லை. ஆனால் அவனிடம் மீண்டும் வருவதற்கும் ஆர்வம் காட்டவில்லை.

அடுத்தபடி, பிரபலமாக இருக்கும் எல்லா நட்சத்திரங்களையும் போட்டு, பிரம்மாண்டமான படம் ஒன்று தயாரிக்கப் போவதாகப் பத்திரிகைகளில் அறிவிப்புக் கொடுத்தான் சாமிநாதன்.

பழைய விநியோகஸ்தர்கள் பாய்ந்தடித்துக் கொண்டு வந்தார்கள். புதுசாக அந்தத் துறைக்கு வந்தவர்களும் சாமிநாதனைப் பற்றி ஓரளவு நல்ல விதமாகவே கேள்விப்பட்டிருந்தபடியால், இவன் கேட்கும் பணத்தை அள்ளிக் கொடுக்கத் தயாராக இருந்தார்கள்.

அத்தனை பேரையும் தனித்தனியாக வரவழைத்துப் பேசினான். ''உங்களுக்கு இல்லாமல் வேறு யாருக்குக் கொடுக்கப் போகிறேன் இந்த ஏரியாவை?...''என்றெல்லாம் வெண்ணெய் வார்த்தைகளைக் கொட்டி விநியோகஸ்தர்களுக்கு அபிஷேகம் செய்து, எல்லோரிடமும் பணத்தைக் கறந்தான்.

மூன்று மாசம்... ஆறு மாசம்... எட்டு மாசம்... அவன் படம் எடுக்கிற வழியாகக் காணோம். விழித்துக் கொண்ட விநியோகஸ்தர்கள் ஒருவரையொருவர் கலந்து பேசிய பிறகுதான், சாமிநாதன் எல்லோர் கண்களிலும் மண் தூவியது தெரிய வந்தது. ஆனால் என்ன செய்ய முடியும்...? ஆள் அகப்பட்டால்தானே...?

கடைசியில் சாமிநாதன் ஊர் திரும்பிவிட்டான் என்று கேள்விப்பட்டு, விநியோகஸ்தர்கள் அவனைப் போய்ப் பார்த்தபோது, ''படமா? மார்க்கெட் நிலைமையே இப்போது சரியில்லை... அதனால், படம் எடுக்க



''அற்பமென்று எதையும் தள்ளா திருப்பதுதான் மகத்துவத்துக்கு அடையாளம். சூரியன் எத்தனை மகத்தானது! இருந்தாலும் ஒரு சின்னஞ்சிறுபூவை எத்தனை அக்கறையுடன் மலரச்செய்கிறது — உலகத்தில் வேறெந்தக் காரியமும் தனக்கில்லாத மாதிரி.

—கலிடா மத்தினி.

சேகரித்தவர்: க. நடராசன்.

வேண்டாமென்று தீர்மானித்திருக்கிறேன்''' என்றான் சர்வ சாதாரணமாக.

''அப்படியானால் எங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுங்கள்!''என்று கேட்டார்கள்.

''அதைப் பற்றித் தனித்தனியே பேசுவோமே!''

அப்படியே பேசினான். அதாவது ஒவ்வொருவரிடமும் ''நான் மஞ்சள் கடுதாசி கொடுக்கப் போகிறேன்... அப்படிச் செய்தால் உனக்குப் பத்து ரூபாய்க்குப் பத்து பைசா கூடக் கிடைக்காது... ஆகவே நான் சொல்கிறபடி செய்... என்னிடமிருந்து முழுத் தொகையையும் திரும்ப வாங்கிக் கொண்டு விட்டதாக எழுதிக்கொடு... உன் பணத்தில் பாதியைத் தந்து விடுகிறேன்.... வேறு யாருக்கும் நான் இப்படிச் செய்யப் போவதில்லை. உனக்குமட்டும்தான் இந்தச் சலுகை!'' என்று சொல்லி, எல்லோரிடமிருந்தும் எழுதி வாங்கிக் கொண்டு, சொன்னபடியே பாதித் தொகையைத் திருப்பித் தந்தான். 'இதுவாயினும் கிடைத்ததே' என்ற திருப்தியுடனும், 'இனி இவன் பக்கம் தலை வைத்துப் படுப்பதில்லை' என்ற தீர்மானத்துடனும் மொத்தப் பேரும் பின்வாங்கினார்கள்.

சாமிநாதனின் புத்திசாலித்தனத்தினால் சில லட்சங்கள் கிடைக்கவே, அவன் யாரும் எதிர்பாராத ஒரு காரியம் செய்தான். படத்துறைக்கு முழுக்குப் போட்டான். எதிலும் இரண்டிரண்டு இருக்க வேண்டும் என்ற தனது கொள்கைப்படி, படத்துறையில் ஈடுபட்டிருந்த போதே அம்பத்தூரில் பினாமி பெயரில் பிளாஸ்டிக் தொழிற்சாலை நடத்தி வந்தான். அதன் நேரடிப்பொறுப்பை ஏற்கப் போய் விட்டான். அதன் பிறகு இப்போதுதான் அவன் பெயர் பத்திரிகைகளில் வந்திருக்கிறது.

ஒரு வேடிக்கை பாருங்கள்; அவன் சினிமாத் துறையை உதறிவிட்டுப் போனாலும் சினிமா கொட்டகையில் ஆரம்பித்த அவனது வாழ்வு அங்கேயேதான் வந்து முடிந்தது.

# சொல் ஒன்று வேண்டும்

**15**

அனுராதாரமணன்

உமா வெகுளி. எந்த ஒரு விஷயத்தையும் வெளிப்படையாகச் சொன்னால் தான் புரியும். ஆனால் விஜி அப்படியில்லையே.... மாமாவின் புத்தி கூர்மை அப்படியே மருமகளிடம் இருக்கிறதே....

'வெறும் வளையல் லிஸ்டைக் கொடுத்து தானா ராஜா இத்தனை காவல்களையும் மீறி வீட்டுக்கு வந்து விட்டுப் போனான்...'

அவள் புருவம் முடிச்சிட அந்தப் பட்டியலையே உற்றுப் பார்க்கும் பொழுதுதான்— புதிதாக ஒரு செய்தி தெரிய வருகிறது...

ஏனெனில்... வளைகாப்புக்காக வந்திருந்த அத்தனை பெண்களுக்கும் விதவிதமான வளையல்கள் அடுக்கியதே தவிர — அந்த வளையல்களுக்கு எல்லாம் இத்தனை விதமான பெயர்கள் இருக்கிறதா என்ன....?

பட்டியல் கொஞ்சம் நீளம்தான். இருந்தாலும் ஒரு புதிரைப் போல சுவாரஸ்யமானதாய்...

பி'ங்க் வளை — 2 டஜன்
'ர'த்ன சிவப்பு வளை — 2 டஜன்
'ச'ங்கு வளை — 2 டஜன்
'வ'ங்கி வளை — 1 டஜன்
''ச'ரிகை வளை — 2 டஜன்
'ம'ணி வளை — 2 டஜன்
'ய'ாமிருக்க பயமேன் வளை — 2 டஜன்
'த்'ரீசஸ்டார் சிவப்பு வளை — 1 டஜன்
'தில்' ரூபா வளை — 2 டஜன்
'ப'ச்சை வளையல் — 3 டஜன்
'க்'வீன்ஸ் டயமண்ட் — 1 டஜன்
'க'த்திரிப்பூ வளை — 2 டஜன்
'த்'ரீ ஸ்டார் கோல்டு வளை — 1 டஜன்
'தி'ரி வேணி வளை — 1 டஜன்
'லே'ஸ் வளை — 3 டஜன்
'இ'தயக் கனி வளை — 1 டஜன்
'ரு'க்மணி வளை — 2 டஜன்
'ப்'ளேன் கருப்பு வளை — 2 டஜன்
'பே'பி வளை — 4 டஜன்
'னே'வி ப்ளூ வளை — 1 டஜன்

அம்மாடி... பெரிய பட்டியல்தான். ஆனால் கூர்ந்து பார்க்கும்பொழுது, பட்டியலின் ஒவ்வொரு முதல் எழுத்துக்கும் அடைப்புக்குறித் அநாவசியமாய் தோன்றினாலும் அத்தனை முதலெழுத்துக்களையும் சேர்த்தால்...

உமாவுக்கு மிக இனிமையான செய்தியாய்...

''பிரசவ சமயத்தில் பக்கத்தில் இருப்பேனே...''

புரிந்தவுடன் விஜி பரபரத்துப்போகிறாள். அறைக் கதவைத் தாழிட்டு விட்டு, உமாவின் பக்கத்தில் அமர்ந்து, தானறிந்த செய்தியை அவளுக்கும் விளக்குகிறாள்....

உமாவோ — விஜியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு முகத்தோடு முகம் சேர்த்து அழுகிறாள். எத்தனைதான் துக்கத்தை அடக்க முயன்றாலும், அழுகை பொங்கிப் பொங்கி வருகிறது.

எல்லாவற்றையும் விட — வீடு தேடி வந்தவன், ஒரு வாய் சாப்பிடக் கூட இல்லையே என்கிற வருத்தம்.

பாவம், மீனாட்சி... அவளுக்கு, தன் மகன் வந்து போன விஷயம் தெரிந்தால்....

சொல்ல வேண்டும் போலத்தான் இருக்கிறது விஜிக்கு. சொன்னால், அதன் பின் வரும் விபரீதங்களை யோசித்துப் பார்க்கும் பொழுது... சொல்லவே வேண்டாம் என்றும் தோன்றுகிறது...

உமாவிடம், திரும்பத் திரும்பச் சிலேட்டில் எழுதிக் காட்டுகிறாள் விஜி.

''தயவு செய்து காட்டிக் கொடுத்து விடாதே உமா...''

'மாமா ரொம்பக் கூர்மையா கவனிப்பாரு. உன் முகத்துல படர்ந்திருக்கிற சந்தோஷத்தைத் துடைச்சு எறி... எப்பவும் போல வளைய வா...'

எத்தனைதான் அவளுக்கு விஜி புத்திமதி கூறினாலும் சில சமயங்களில் விஜியே, தன் ஆனந்தத்தை அடக்கும் வழி தெரியாமல் தவித்துப் போகிறாள்...



காரணமில்லாமல், சிரிப்பும் அழுகையும் ஒருசேரப் பொங்குகிறது...

எல்லாவற்றையும் மீறி ஒரு எண்ணம்....

'இந்த ராஜா — எங்கே ஒளிந்திருப்பான்..'

'இத்தனை தூரம் மும்முரமாய் போலீஸ் அவனைத் தேடிக் கொண்டிருக்கையில் — யார் அத்தனை தைரியமாய் அவனுக்கு அடைக்கலம் கொடுத்திருப்பார்கள்....'

இந்த நினைப்பு வந்ததும் — விஜியின் கண்ணெதிரே தோன்றியது எல்லாம், மஞ்சள் மினுமினுக்க பெரிய குங்குமப் பொட்டும், வெற்றிலைப் போட்டுச் சிவந்த வாயுமாய் சற்று முன் வந்து விட்டுப் போன வளையல்கார அம்மாள் தான்.

அந்த அம்மாள், மைலாப்பூர் கபாலீச்வரர் கோவிலுக்குப் பக்கத்தில கடை வைத்திருப்பது விஜிக்குத் தெரியும்.

அன்று கூட, மீனாட்சி அந்தக் கடையில் வளையல் வாங்கிக் கொண்டிருக்கும்பொழுது, அவள் தாள முடியாத வருத்தத்துடன் காரில் உட்கார்ந்திருந்தாளே...

அந்த நாள் ஞாபகத்துக்கு வந்ததுமே— அன்று தன்னைப் பார்த்துப் படபடப்புடன் பேசி விட்டு ஓடிய பெண்ணின் முகம் அவளுக்கு நினைவில் வந்து நிற்கிறது...

அவள் யார்?

ஆச—ராஜாவின் இருப்பிடம் இரண்டு பேருக்குத் தெரிந்திருக்கிறது...

ஒன்று—வளையல்கார அம்மாள்.. இரண்டு — ஷிபான் புடவையும், ஸ்லீவ்லெஸ் ரவிக்கையும், அரை முதுகோடு வெட்டி விடப்பட்ட கூந்தலுமான அந்தப் பெண்.

பின்னவளின் விலாசம் தெரியாது. ஆனால் முன்னவளின் கடை தெரியும்.

அன்று மாலையே உமாவுடன் கோவிலுக்குப் போய் வரும் சாக்கில், அந்த வளையல் கடைப் பெண்மணியைச் சந்தித்து விட்டு வர வேண்டும் என்கிற தீர்மானம் நெஞ்சில் உருவாக...



அன்றைய விருந்தில், என்னதான் தன்னை அடக்கிக் கொண்டு வளைய வந்தாலும் — பரந்தாமன் தன் நண்பர்களுடன் அமர்ந்து சாப்

பிடும் பொழுது, பாயசம் பரிமாறிய பொழுது, விஜி, தன் கட்டுப்பாட்டைக் கொஞ்சம் தளர்த்தித்தான் விட்டாள்.

பரந்தாமன் இனிப்பு விஷயத்தில் ரொம்பவும் கட்டுப்பாடாக இருப்பவர். உள்ளூரச் சபலமிருக்கும். ஆனால், இப்பொழுதோ சர்க்கரை வியாதி மெள்ளத் தலைகாட்டியதால் — தீர்மானமாகத் தன் உணவில் சர்க்கரை சேர்ப்பதையே விலக்கி விட்டார்.

காபியில் கூடச் சர்க்கரை இடையாது...

எப்பொழுதாவது மீனாட்சி வலியுறுத்தினால் —கணீரென்று சொல்லி விடுவார்:

''கசப்பும், கண்டிப்பும் ஆரம்பத்துல ஏத்துக்கறதுக்குக் கஷ்டமா இருந்தாலும், பழகிட்டா அதைப் போல் சௌகரியம் இடையாது மீனாட்சி...''

விஜி, மாமாவுக்குப் பரிமாறும்பொழுது சர்வ ஜாக்கிரதையாய்ப் பரிமாறுவாள்....

அன்றோ...

மாமாவின் இலையில் ஒரு கரண்டிக்கு, இரண்டு கரண்டியாகப் பாயசம்...

பரந்தாமன், மருமகளின் கையைப்பிடித்துத் தடுத்து நிறுத்தியிருக்கா விட்டால் —மூன்றுவது கரண்டிப் பாயசத்தையும் அவரது இலையில் ஊற்றியிருப்பாள் அவள்.

தன்னிலை மறந்திருந்தவளை, மாமாவின் இறுக்கமான பிடி — சுய நினைவுக்குக் கொண்டு வர...

''என்னம்மா இது?''

பரந்தாமன் விஜியின் முகத்தையே உற்றுப் பார்க்கிறார். அவளது இதழ் கடையில், சிறைப்பட்டுக் கிடந்த அந்த இளஞ்சிரிப்பு — சூழ்நிலைக்குச் சற்றும் பொருந்தாததாய்...

நிஜம்தான்.

யாரால், இந்தச்சமயத்தில் சந்தோஷமாய்ச் சிரிக்க முடியும்?

விழாவின் நாயகனை ஒரு பக்கம் போலீஸ் வலைவீசித் தேடிக் கொண்டிருக்கிறது....

இங்கே அவன் வீட்டில் அவனால் வளரப் போகும் வம்சத்தை எண்ணி விருந்து நடந்து கொண்டிருக்கிறது...

ஒரு பூந்தோட்டமே சின்னாபின்னமாகிக் கொண்டிருக்கும் நேரத்தில் — தோட்டத்துக்குச் சொந்தக்காரன் வசந்தோற்சவத்துக்கு ஏற்பாடு செய்வது போல...

பரந்தாமன் மட்டுமல்ல, அவருடன் சாப்பிட அமர்ந்த யாருக்குமே சோறு வேண்டியிருக்கவில்லை.

எப்படி வேண்டியிருக்கும்?

ஏதோ ஒரு கட்டாயத்தின் பேரில் — அந்த நேரத்தில் தாங்களும் சாப்பிட மறுத்தால் பரந்தாமனின் நெஞ்சு புண்படுமே என்கிற ஆதங்கத்தில் இலை முன் அமர்ந்து ஏதோ சாப்பிடுவதாகப் பெயர் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தச் சமயத்தில் பாயசம்... அதுவும் பரந்தாமனுக்கு வேண்டியிருக்குமா?

பாயசம் என்றாலே மகனின் முகம்தானே மனசில் வந்து நிற்கிறது...?

சாதாரணப் பண்டிகை என்றால் கூட ராஜா இரண்டு நாட்கள் முன்னதாகவே தாயை நச்சரிக்கத் தொடங்கி விடுவானே...

''அம்மா நாளை மறுநாள் ஆடி வெள்ளியில்லே...''

''ஆமா, அதுக்கென்னடா இப்ப?''

''நான் விரதமிருக்கப் போறேன்...''

''இது என்னடாது புதுப் பழக்கம்...''

''ஆமாம்மா... இனிமே ஆடி மாசம் முழுக்க ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் நான் விரதமிருக்கத்தான் போறேன். சுத்தப் பட்டினி...''

''ஐய்யோ .. சுத்தப் பட்டினியெல்லாம் இருக்கப் படாதுடா. வாழுற வீட்டுக்கு ஆகாது... ஒரு பொழுது பட்டினி இரு. போதும்.''

''அதெல்லாமில்லே சுத்தப் பட்டினி தான். ஆனா பாலுக்கு தோஷமில்லேன்னு பெரியவங்க சொல்லியிருக்காங்க இல்லையா... அதனால — உனக்கு உன் மாமியார் கொடுத்த பெரிய வெள்ளிக் குடம்இருக்கு இல்லே... அது நிறையப் பால் பாயசம் வச்சுக் கொடுத்திடு... போதும்...''

மீனாட்சி சிரிப்பை அடக்க மாட்டாமல் தவிப்பாள். ஏன் பரந்தாமனும்தான்.

மகன் தன்னெதிரில் இது போல வேடிக்கையும் விளையாட்டுமாகப் பேசவில்லையே என்கிற வருத்தம் அவருக்கு நிறைய.

தாயும் மகனும் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டிருப்பார்கள். பரந்தாமனின் தலையைக் கண்டதும் ராஜா பெரிய மனிதனைப்போல முகத்தை உயரே தூக்கி வைத்துக்கொள்வான்.

இதனாலேயே — இது போன்ற ரசமான சம்பாஷணைகள் அவர்களிருவரிடையே நடைபெறும் பொழுது அவர் 'சட்'டென அங்கு பிரவேசிக்க மாட்டார்.

---

விமானத்தில், ரயிலில், சினிமா தியேட்டரில் பிரசவம் என்று செய்தி படித்திருக்கிறோம்.

கரை புரண்டு ஓடும் வெள்ளத்துக்கு அஞ்சி மரத்தில் ஏறிய பெண் மரக்கிளையில் பிரசவித்தாள். அவளுக்கு ஆண் குழந்தை பிறந்தது. இந்தச் சம்பவம் தென்னாப்பிரிக்காவில் நடந்தது.

பிரசவித்த பெண், அவளது கணவன், பச்சிளங்குழந்தை ஆகிய மூவரும் 48 மணி நேரம் மர உச்சியிலேயே இருந்தனர். அதன் பின்னர் அவர்கள் மீட்கப்பட்டனர்.

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.



அந்தப் பேச்சு வார்த்தைகளை ஒதுங்கி நின்று கேட்டு ரசித்து விட்டுப் பிறகுதான் அவர்களெதிரில் வருவார்.

அப்படி ஒளிந்திருந்து கேட்டு அறிந்தது தான் மகனின் பாயச ஆசை...

அவனை விட்டுவிட்டுத் தான் மாத்திரம் சாப்பிட எப்படி மனசு இடம் கொடுக்கும்?

என்னதான் கல் மனசென்றாலும்... பெற்ற பாசம் கல்லையும் இளகச் செய்து விடுகிறதே...

அவரின் பார்வையைத் தாள மாட்டாது விஜி சர்வ நாடியும் ஒடுங்கிப் போய் விட்டாள்...

பந்தியில் இருந்த அனைவருமே பரந் தாமனையும் விஜியையுமே மாறி மாறிப் பார்க்க...

அவ்வளவுதான்.

பாதிச் சாப்பாட்டிலேயே கையை உதறிக் கொண்டு எழுந்து விட்டார் பரந்தாமன்.

''சார்... அடடா... என்ன இது... உட் காருங்க சார்...''

மற்றவர்கள் எத்தனை வற்புறுத்தியும் கேளாமல்...

மாமாவின் எதிர்பாராத செயலில் பிரமை பிடித்தாற்போல நின்று விட்டாள் விஜி.

மீனாட்சிதான் அவரது அறையை நோக்கி ஓடுகிறாள்.

'ச்சீ... என்ன அசட்டுத்தனம்....'

பரிதாபத்திற்குரிய விஜி தன்னைத்தானே திட்டிக் கொள்ள...

அன்றைய விருந்து — விஜி உமா இருவரைத் தவிர வேறு யாருக்குமே நிறைவு தராததாய்ப் போய் விட்டது...

உமா...

அவள் தன் மாமனாரின் மனவேதனையைப் பொருட்படுத்தும் நிலையில் இல்லை ..

அன்றைய வைபவத்தில் தன் கணவனும் பங்கு பெற்றான் என்கிற நினைப்பே சந்தோஷமாய்...

அதிக சந்தோஷத்தில் கூட சாப்பாடு வேண்டியிருக்காது போலும். தன் அறையை விட்டு வெளியே வரவே இல்லை அவள்...

தனது கரத்திலுள்ள வளையல்களில் சில— அவன் கையால் தேர்ந்தெடுத்துக்கொடுத்தது என்கிற நினைவு வந்ததும் தன் கைகளிலுள்ள வளையல்களைத் தடவித் தடவிப் பார்க்கிறாள்.

'உங்களில் யார் யார் — என் கணவரின் கைப்பட்ட புண்ணியசாலிகள்...'

அவள் ஒவ்வொரு வளையலையும் செல்லமாய்த் தட்டி விடுகிறாள். அவற்றின் 'கிணு கிணு' ஓசைகளே நான்தான். நான்தான் உன் கணவரிடமிருந்து வந்தவள்' என்று பதிலுரைப்பது போல...

மொத்தமாய் அத்தனை வளையல்களுக்கும் சேர்த்து முத்தமிடுகிறாள் அவள்... காலையில் மைதீட்டி காதளவோடிய கண்கள்— வளைக்கரங்களின் மீது ஆனந்த வர்ஷமாய்க் கண்ணீரைப் பொழிகின்றன...

இந்த நிலையில் — மனசு நிறைந்திருக்கும் இந்த நேரத்தில் — சாப்பாடு எப்படி வேண்டியிருக்கும் அவளுக்கு?

(தொடரும்)





மணிக்கொடி காலச் சிறுகதையாள ரும் இலக்கிய விமர்சகரும் எழுத்து ஆசிரியருமான சி. சு. செல்லப்பா இலக்கிய நண்பர்களுக்கு ஒரு சுற்ற றிக்கை அனுப்பியுள்ளார். அதி லிருந்து...

''...ஐம்பது புத்தகங்களை வெளியிட்டு சுமார் பதினைந்து ஆண்டுக் காலம் நானே அவற்றைச் சுமந்து கொண்டு தமிழக கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகள், பல்கலைக்கழகங்களுக்கு இலக் கியப் புத்தக விற்பனை யாத்திரை செய்தேன்.

சென்ற நாலைந்து ஆண்டுகளாக வயது, உடல்நிலை காரணமாக மேலும் தொடர முடியாது போனதால் பல ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ள புத்தகங்கள் முடங்கி விட்டன.

இந்தக் கடிதத்தின் பின்புறம் உள்ள பட்டியலில் காணும் நூல்களில் நூறு ரூபாய் பெறுமானமுள்ள புத்தகங்களைச் சலுகை விலையில் ஐம்பது ரூபாய்க்கு வழங்க விரும்புகிறேன்... தபால் செலவு தனி... ஆதரவு தரும்படி வேண்டிக் கொள்கிறேன்.''

(19, கோவில்தெரு, சி.சு.செல்லப்பா வத்தலக்குண்டு.)

இம்மாதிரி ஏழைத் தமிழ் எழுத் தாளர்கள் துயரடையத் தமிழக அரசு பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதா?

தனி நபர்களிடம் புத்தகம் வாங்கச் சக்தி இல்லை. அரசோ நூலக இயக் கத்தில் நூலான்புடை சேர அனு மதித்து வருகிறது. கலைமகள் கண்ணீர் உகுக்கிறாள்!




அந்தமான் தீவு கடற்கரையில் பாறைகள் சூழ்ந்த குட்டைக்கு அருகே உட்கார்ந்திருந்தாள் மாயா. பக்கத்தில் முனியப்பன் பொறுமையாக மீன் வலையின் ஒரு முனையைப் பிடித்துக் கொண்டு நின்றான். அருகிலிருந்த நீர்த்தொட்டியில் கடல் நீர் நிரம்பியிருந்தது. குறிப்பெடுத்துக் கொண்டிருந்த மாயா எழுதுவதை நிறுத்தினாள். அந்தி சாய்ந்து விட்டதால் பார்வைக்கு எதுவும் தெளிவாய்த் தெரியவில்லை. முனியப்பன் வலையை வெளியே இழுக்கலானான்.

முதல் நாள் இரவு புயல் அடித்திருந்தது. கடல் நீர் புகுந்து குட்டையாய்த் தேங்கி நின்ற அந்த இடத்தில் பெரிய பாறை பெயர்ந்து விழுந்திருந்ததால், கடற்கரை மணலெல்லாம் குட்டையிலிருந்த பிராணிகளும், தாவரங்களும் தூக்கியெறியப்பட்டிருந்தன. இல்லத்தரசி ஒருத்தி வீட்டைச் சுத்தம் செய்து குப்பைக் கூளங்களை வெளியில் கொட்டியது போல் இருந்தது.

மாயா மெல்ல புன்னகைத்தாள். தன்னுடைய பம்பாய் ஃப்ளாட்டை ஒழிக்க முயன்றது அவளுக்கு நினைவுக்கு வந்தது. வேண்டாதவற்றை எல்லாம் தூக்கிப் போட்டு விட வேண்டும் என்ற தீர்மானத்துடன் குவிந்து கிடந்த பத்திரிகைகளை எடுத்தாள். ரவி வீட்டுக்குத் திரும்பி வரும் போதும் அவற்றை இன்னும் புரட்டிக் கொண்டிருந்தாள்.

''நிஜமாகவே இந்தச் சமையல் குறிப்புல கொடுத்திருக்கிற பலகாரத்தைச் செய்யப் போறியா?'' என்றான் கிண்டலாக. ''இதைச் செய்ய மூணு மணி நேரம் தான் ஆகும். தேவையான சாமானை வாங்க ஒரு மாசத்து சம்பளம் போதும்'' என்றவன், ''ஆமாம் உனக்கெங்க அதுக்கெல்லாம் நேரம் இருக்கப் போறது. வழக்கமான சாம்பாரையும் பொரியலையும் செய்யறதே பெரிய காரியம்




தான்'' என்று பின்னாலேயே சலித்துக் கொண்டான்.

அதற்குள் ஏழு வயது மகள் உஷா ஓடி வந்தாள். ''அம்மா இதெல்லாம் தூரவாப் போடப் போறே? நான்தான் அப்பவே சொன்னேனே இந்தப் புத்தகங்களெல்லாம் படம் கத்தரிக்க வேணும்னு. அந்தப் பாட்டிலையெல்லாம் போட்டுடாதே. நான் அதை பெயிண்ட் பண்ணி வச்சுக்குவேன்'' — அவ்வளவுதான். ஒழிக்கும் படலம் அதோடு நின்றது.

குறிப்பெடுத்துக் கொண்டிருந்த புத்தகத்தைப் பையினுள் வைத்துக் கொண்டாள் — மாயா. முனியப்பன் வலையில் சிக்கி விருந்தவற்றைத் தொட்டிக்குள் கொட்டிக் கொண்டிருந்தான்.

''இன்னைக்கு நிறையப் பிடிச்சிருக்கோம். தொட்டியைத் தூக்கி வர யாரையாவது கூப்பிட்டுக்க'' என்றான்.

குடிசையில் முனியப்பன் மனைவி தங்கம் மாள் ஏற்றியிருந்த விளக்கின் ஒளி அவளை வரவேற்றது. உள்ளே நுழைந்ததும் தனக்கென ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குச்சென்று அடுக்கி வைத்திருந்த கண்ணாடி ஜாடிகளை ஒவ்வொன்றாய் ஆராய்ந்தாள். பரிசோதனைசாலையாகப் படைக்கப்பட்ட அந்த அறையின் ஒரு மூலையில் பெரிய குளியல் தொட்டி ஒன்று இருந்தது. எப்போதாவது அகப்படும் பெரிய மீனையோ, நண்டையோ போட்டு வைக்கப்பயன்பட்டது.

ரவிக்கு இந்த வேலையை அவள் எடுத்துக் கொள்வதில் விருப்பமே இல்லை. 'போகக் கூடாது' என்று சொல்லாவிட்டாலும், ''போய்த்தான் ஆகணுமா மாயா? இங்கேயே அந்த வேலையைச் செய்ய முடியாதா?'' என்று அடிக்கடி தாபம் நிறைந்த குரலில் கேட்டுக் கொண்டிருந்தான்.

''என்ன ரவி இது? இதுமாதிரி 'சான்ஸ்' உலகத்திலேயே ஒரு சில பேருக்குத்தான் கிடைக்கும். உங்க ஆஃபீஸ் ஃபைல் மாதிரி சண்டவர் கைக்கும் போய்ச் சேராது. பெரிய பெரிய விஞ்ஞானிகள் எல்லாம் இது மாதிரி வாய்ப்புக்குத் தலையையே குடுக்கத் தயாரா இருக்காங்க, தெரியுமா? நீங்க இவ்வளவு சுயநலவாதியா இருக்கக் கூடாது.''

''நீயில்லாம நாங்க எப்படி சமாளிப் போம் மாயா? உஷாவை யார் பார்த்துக் குவா?''

''இது என்ன அசட்டுத்தனம். அதான் உங்க சித்தி இருக்காங்களே. அவங்களுக்கோ வேறே நாதி கிடையாது. சந்தோஷமா வந்து உங்க கூட இருக்க ஒத்துக்குவாங்க. இல்லாட்டியும் எனக்குக் கிடைக்கிற சம்பளத்துல வேலைக்காரங்களை வச்சுச் சமாளிச்சுக்கலாம். நான் ஒரு வருஷத்துக்குத்தானே போகப் போறேன்?''

ரவி அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. ஆனால், அவள் கிளம்புவதற்கு முதல்நாள் இரவு படுக்கையில் அவளிடம் குழந்தை போல் தொற்றிக் கொண்டான். ''நீயில்லாமல் எங்களால் இருக்கவே முடியாது மாயா. அந்தக் கடலுடைய தேவையை விட எங்க தேவைதான் பெரிசு'' – குரல் கரகரக்கச் சொன்னவனைச் சமாதானம் செய்தாளே ஒழிய அவள் மனசெல்லாம் பிரயாணத்துக்காகச் செய்ய வேண்டிய கடைசி நிமிட ஏற்பாடுகளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது.

'இப்போது எப்படி இருக்கிறார்களோ?' என்று யோசித்தாள். ரவியிடமிருந்து கடைசியாக வந்த கடிதம் உஷாவுக்கு இன்னும் இருமல் குணமாகவில்லை என்று தெரிவித்தது. உஷா ரொம்ப மென்மையானவள். காற்றடித்தால் ஜலதோஷம் பிடித்துவிடும்.

முனியப்பன் இன்னொருத்தன் உதவியோடு தொட்டியைக் கொண்டு வந்துவைத்தான். முனியப்பன் உதவிக்குக் கிடைத்தது அதிர்ஷ்டம்தான். மற்ற சக விஞ்ஞானிகள் எல்லோருமே ஆண்கள். இவள் அவர்களிடமிருந்து விலகியே இருந்தாள். கடலில் கிடைக்கும் உணவுப் பொருட்களைப் பற்றி ஆராய்ச்சி செய்ய ஒரு சர்வதேச நிறுவனத்தால் வகுக்கப்பட்ட திட்டத்திற்காக அவர்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். 'மரைன் பயாலஜிஸ்டான' அவளை பிளாங்க்டன் என்னும் கடல் தாவரம் குறித்து ஆராயுமாறு பணித்திருந்தார்கள்.

திடீரென்று அறையின் மூலையிலிருந்த தொட்டியிலிருந்து சடசடவென்று ஓசை வந்தது. பிளாங்க்டனைத் தவிர வேறு ஏதோ பிராணியும் அன்று அகப்பட்டிருக்க வேண்டும். 'சடசட'வைத் தொடர்ந்து விநோதமான அலறல். அந்தத் திசையை நோக்கி விரைந்தாள் மாயா. லாந்தரை உயரே தூக்கிப் பிடித்து மெல்லத் தொட்டிக்குள் எட்டிப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! சாம்பல் நிறத்தில் இரண்டு மென்மையான கரங்கள் தொட்டியின் விளிம்பைப் பிடித்துக் கொண்டிருந்தன. ஜவ்வு போன்ற முகம் மேலெழும்பி அவளைக் கெஞ்சலாய்ப் பார்த்தது. லாந்தரின் வெளிச்சத்தால் திடீரென்று தாக்குண்ட இரண்டு கண்கள் கூசிக் கொட்டின. ஈரமான தலைமயிர் பின்னால் கடல் பாசி போல் நீண்டு, செதில்கள் நிறைந்த வாலைத் தொட்டது. கடல் கன்னி அல்லவா அகப்பட்டிருக்கிறாள்?

மாயாவுக்கு முதன் முதலில் தோன்றிய உணர்ச்சி அவநம்பிக்கைதான். மெல்ல அவநம்பிக்கை அகன்றது. குழந்தைப் பருவத்தில் கடல் கன்னி கதையைப் படித்து மகிழ்ந்திருக்கிறாள். இதன் பாதிப்பாய் உள் மனம் இன்னும் அப்படி ஓர் இனம் இருப்பதாகவே நம்பிற்று. இந்தக் கடல் கன்னி புயலால் தூக்கியெறியப்பட்டுக் கரைதட்டியிருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள்.

கையிலிருந்த விளக்கைக் கீழே வைத்துவிட்டு முனியப்பனைக் கூப்பிட்டாள் மாயா. குளியல் தொட்டியின் அடியில் விரிப்பைப் போட்டு, பக்கங்களை ஈரத் துண்டால் மூடினாள். முனியப்பன் தொட்டியில் கடல்நீரை நிரப்பினான். ஒரு ஜாடியிலிருந்த கடல் பாசியைத் தொட்டியினுள் போட்டாள். கடல் கன்னியை ஈரத் துணியால் சுற்றித் தயார் செய்திருந்த தொட்டிக்குள் மெல்ல மெல்ல இருவருமாய் இறக்கினர். எந்தவித எதிர்ப்பும் இன்றி மெல்ல மிதந்தாள் கடல் கன்னி.

இந்தக் கண்டுபிடிப்பு தன் வாழ்வையே மாற்றக் கூடும் என்று உணர்ந்தாள் மாயா. ப்ளாங்க்டனையும் கடல் புல்லையும் ஆராய வந்தவளுக்கு இத்தகைய அதிர்ஷ்டம் கிடைக்கும் என்று கற்பனை கூடச் செய்து பார்க்கவில்லை. இப்போது உலகப் பிரசித்தம் ஆவதற்கே வாய்ப்பு இருந்தது.

மாயா என்றுமே புகழுக்கு ஆசைப்பட்டவள்தான். அக்கா, தங்கைகள் புடவைகள் வாங்குவதிலும், மாப்பிள்ளைகளை விமர்சிப்பதிலும் காலம் கழித்த போது இவள் மட்டும் பெரிய விஞ்ஞானி ஆக வேண்டும் என்று கனவு கண்டாள். கல்லூரித் தோழிகளுடன் அரட்டை அடிக்காமல் தங்கப் பதக்கங்களைப் பெறுவதில் கவனம் செலுத்தினாள்.

அன்றிரவு மாயா சரியாகத் தூங்கவில்லை. அவ்வப்போது எழுந்து கடல் கன்னியைக்கவனித்துக் கொண்டாள். ஒரு முறை கடலிலிருந்து அழுகை சப்தம் வருவது போல் தோன்றிற்று. வெளியே போய் எட்டிப் பார்த்தபோது நிலா வெளிச்சத்தில் விநோதமான உருவங்கள் அலைகளிலிருந்து எழும்புவது போல் தோன்றியது. அடுத்த கணத்தில் கரையில் மோதிய அலைகளின் நுரைமட்டுமே தெரிந்தது.

சீக்கிரமே எழுந்து கடல் கன்னிக்கு உணவு கொடுத்தாள். அவள் போட்ட ரொட்டித் துண்டங்களையோ ப்ளாங்க்டனையோ சீந்தவில்லை கடல் கன்னி. அவள் உணவுப் பழக்கங்கள் புரியும் வரை ஒவ்வொன்றாகக் கொடுத்துப் பரிசோதிக்கவேண்டியதுதான். கடல் கன்னி தண்ணீரை அளைய ஆரம்பித்தாள். கரையும் கண்களால் மாயாவை உற்று நோக்கினாள். 'இவளுக்குக் கூடப் பிறந்தவர்கள் இருப்பார்களோ? இவள் கணவனும் குழந்தைகளும் ஆழ்கடலில் இவளைத் தேடுவார்களோ? அல்லது உணர்ச்சியில்லாமல் ப்ளாங்க்டனைப் போல் மிதந்து கொண்டிருப்பார்களோ?'... மாயா யோசிக்க ஆரம்பித்தாள்.

சிந்தனையினிடையே திடீரென்று உஷாவின் ஞாபகம் வந்தது – தலைமயிரை முதுகில் விரித்து விட்டுக் கொண்டு, ''அம்மா தலையை உலர்த்தி விடு'' என்று ஓடிவந்தவள் அதை முழுக்கச் செய்து விடுவதற்குள் பொறுமை இழந்து ஓடி விடுவாள். ''நீ ரொம்ப மெல்ல பண்ணி விடறாய் அம்மா'' என்றவள் ரவியிடம் போய் அவள் கதை

சொல்லிக் கொண்டே துண்டால் தலையைத் துவட்டி முடிக்கும் வரை பொறுமையாக இருப்பான்.

புத்தகத்தை எடுத்துக் கொண்டு வராந்தாவுக்குச் சென்றாள் மாயா. தலைமை அலுவலகத்துக்கு அவளை அழைத்துப் போக அன்று ஜீப் வரவிருந்தது. அங்கு போய்த் தன் புதிய கண்டுபிடிப்பை விளக்கவேண்டும்.

ஒரு சில பத்திகள் எழுதி முடிப்பதற்குள் உள்ளேயிருந்து ஓசை வரக் கேட்டு விரைந்தாள். முனியப்பனும் அவன் நண்பர்களும் தொட்டியைச் சுற்றி நின்று கொண்டு கடல் கன்னியின் இளிஞ்சல் போன்ற மார்பகங்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவள் தொட்டியின் அடியில் சென்று குப்புறப் படுத்துக் கொண்டாள். அவள் தலை மயிர் மட்டும் தோகையைப் போல் விரிந்து தண்ணீரின் மேல் மிதந்தது. முனியப்பனின் நண்பன் ஒரு குச்சியை எடுத்துக் குத்தினான். கடல் கன்னி துடித்தாள். வால் தண்ணீரைச் சிலுப்பியது. அவள் கண்டத்திலிருந்து பயங்கர ஓலம் எழும்பி எதிரொலித்தது.

''என்ன செய்யறீங்க... முனியப்பா, நீ எப்படி என் அனுமதி இல்லாம இவங்களைக் கூட்டி வரலாம்?'' ஓர் அதட்டு அதட்டினாள் மாயா.

''வந்து... அம்மா...''

''உடனே இவங்களை வெளியே கூட்டிக் கிட்டுப் போ.''

அவர்கள் போனதும் மாயா தொட்டியினருகே ஓடினாள். கடல் கன்னி தன் மெலிய கரங்களைக் குவித்துக் கொண்டிருந்தாள். வால் துடித்தது. முகத்தில் அதீதமான வலி தெரிந்தது. கரையும் கண்களுடன் மாயாவைப் பார்த்தாள்.

மாயா அந்தக் கண்களைப் பார்த்துக் கொண்டேயிருந்த போது அவை நிர்ச்சலனமான சமுத்திரமாக மாறின. இவளுக்கும் ஆழ் கடலில் அன்புச் செல்வங்கள் இருக்கிறார்கள். அவர்களை இனி தான் பார்க்கவே முடியாது என்று இவளின் உள்ளுணர்வு உணர்த்தியிருக்கும்; இவள் எண்ணங்கள் தான் விட்டுப் பிரிந்து வந்த சமுத்திரத்தின் குளிர்ந்த நீரையும், மென் மணல் படுக்கையையும், பவளத் தீவுகளையும் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கவேண்டும்.

அந்தக் கணத்தில் மாயா தானே ப்ளாங்க்டனைப் போல் குறிக்கோளின்றி மிதப்பதை உணர்ந்தாள். வாழ்க்கையின் அர்த்தத்தை ஒரு மைக்ரோஸ்கோப்பின் கீழ் தேடும் முயற்சியில் தனக்காகவே வாழ்ந்து கொண்டிருப்பவர்களை மறந்துபோயிருந்தது புரிந்தது. கடல் ஜந்துக்கள் நிறைந்த கண்ணாடி ஜாடிகளாலான சமுத்திரத்தில் முடிவின்றி மிதந்தாள். எட்டாத தூரத்திலிருந்து ரவியும் உஷாவும் அவளை அழைத்தனர். சிறிது நேரம் கழித்து மறைந்து விட்டனர்.

வெளுத்த கண்களும் நடுங்கும் உடலுமாய் இருந்த கடல் கன்னியைத்தான் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்தாள் மாயா. நூற்றுக் கணக்கான கண்கள் இந்த ஜீவனின் உடலைக் கூறுபோடும் காட்சியும், சோதனைச் சாலையின் மேஜையில் வெட்டுவதற்குத் தயாராய் இவள் பூவுடல் கிடத்தப்பட்டிருப்பதும் கண் முன் தோன்றின. துண்டங்களாக்கப்பட்ட உடலை விஞ்ஞானிகள் குத்தியும், குதறியும், அளந்தும் நிறுத்தும் பார்த்தனர்.

தொட்டியின் அருகே மண்டியிட்டு அமர்ந்தாள் மாயா. மிதந்து கொண்டிருந்த தலைமயிரை மெல்ல ஒரு கையால் கோதினாள். அவள் தொட்டதும் கடல் கன்னி அசையாமல் நின்றாள்.

''நாம் வீட்டுக்குப் போகும் நேரம் வந்துவிட்டது'' என்றாள் மெதுவாக.

வெளியே போய் முனியப்பனைக் கூப்பிட்டாள். ''இன்னும் மூணு பேரை அழைச்சுக்கிட்டு வா.'' அவர்கள் வந்ததும் குளியல் தொட்டியைத் தூக்கச் சொன்னாள்.

முதல் நாள் கடல் கன்னி அகப்பட்ட குட்டையை நோக்கிச் சென்றார்கள். தூரத்தில் ஒரு கப்பல் வருவது தெரிந்தது. ஒரு கணம் தயங்கினாள் மாயா. ஒரு சில புகைப்படங்கள் எடுப்பதால் என்ன நேர்ந்து விடும்? கடல் கன்னியைத் திரும்பிப் பார்த்தாள். அவள் கண்கள் மாயாவை ஆவலுடன் நோக்கின – ஒரு குழந்தை தாயின் அனுமதிக்காகக் கெஞ்சுவது போல. மாயா கப்பல் வந்த திசையிலிருந்து பார்வையை அகற்றினாள். அலைகளுக்குள் நடந்தாள். நீர் மட்டம் கணுக்கால்களைக் கடந்து முழங்காலை எட்டும் வரை நடந்தாள். அவள் சைகை காட்டியதும் முனியப்பனும் அவன் சகாக்களும் செயல்பட்டனர்.

தொட்டியை வேகமாகச் சாய்த்ததும் வெள்ளி மின்னலென எழும்பித் தண்ணீருக்குள் குதித்தாள் கடல் கன்னி. அடுத்த கணம் சூரிய கிரணங்கள் அலைகளில் நர்த்தனமாடுவது மட்டுமே தெரிந்தது.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: சீதா ரவி



''என்ன சார் இது... இந்த நாவல்லே இந்தப் பக்கம் முழுவதும் எழுத்தையே காணோம்?''

''அதுவா? கதாநாயகி நீண்ட நேரம் ஒண்ணுமே பேசாம மௌனம் சாதிச்சதை ஆசிரியர் அப்படி 'சிம்பாலிக்கா' உணர்த்தியிருக்கார்!''

—எம். பாஸ்கர்.

# ஐஸ் க்ரீம் க்ரைம்!

கதை: ஜே.எஸ்.ராகவன்

சித்திரம்: செல்லம்

②

ஐஸ் க்ரீம் சக்கரவர்த்தி 'ஜில்ஜில்' ஜனார்த்தனன் கார் வரும் சத்தம் கேட்டு, திருட்டுத் தனமாக வீடியோவை நிறுத்துகிறார்.

என்னங்க, வீடியோவிலே படம் ஓடலே? கலர் டி.வி. கம்னு இருக்குது. நாடா அறுந்து போச்சா?

நல்ல கலர் படம்னு ஏமாத்திட்டான், கனகம். ஒரே ஒரு கலர். அதுவும் நீலம் தான் தெரியுது. அதான் நிறுத்திட்டேன்.

காஸ்கெட் நெகிழ்ந்த பிரஷர் குக்கர் போல் பெருமூச்சு விடுகிறாள் கனகம்.

நீலமா? ஏதோ ப்ளு ஃபிலிம் அப்படிங்கறாங்களே, அந்த கண்றாவியெல்லாம் பாக்கறீங்களா என்ன?

சேச்சே இந்த வயசிலா? நீலகண்டம்! நீலகண்டம்

ஏதோ நாலு எழுத்து படிக்காட்டியும் எனக்குச் சரின்னு தோணினதைச் சொல்கிறேன். அந்த நீலகண்டனை நம்பாதீங்க.

நான் கூப்பிட்ட நீலகண்டம், சாமி! வெஷத்தை முழுங்கினவருதான். தங்கை பையன் நீலகண்டன் இல்லே.

உங்க தங்கை மவன் நீலகண்டனுக்குத்தான் உடம்பு பூரா விஷமாச்சே! அவனை நம்பாதீங்க.

'ஜில்ஜில்' ஜனார்த்தனன் சுந்தர்பன் புலி போல் சீறுகிறார்.

சர்தான் நிறுத்துடி. காலட்சேபம் கேட்டுட்டு வந்தவ நேர உபதேசம் செய்ய வந்துட்டியா?

காலட்சேபத்துக்கே வழி இல்லாத புள்ளையைத் தூக்கி விட்டீங்க. இப்போ உங்க தலை மேலே ஏறி உக்காந்து இருக்கு.

ஏய் கனகம். நீ சமையல் அறையிலேயும் சாமி அறையிலேயும் இரு. ஆபீஸ் அறையிலே மூக்கை நுழைச்சே அறை வாங்குவே!


பொண்ஜாதின்னு கொஞ்சமாவது மதிப்பு குடுங்க. அன்னிக்கு சதீஷ் சொல்றான்....
என்ன சொன்னான் உன் தம்பி சதீஷ்? சத்தியசீலர். அவனும் அவன் தலையும்...


ஏங்க அவன் மேல அவ்வளவு வெறுப்பு? உங்க பிஸினஸை முன்னுக்குக் கொண்டு வந்தது சதீஷ்தான்னு முன்னெயெல்லாம் சொல்வீங்களே.
உனக்குப் புரியாது, விடு


இருபத்து எட்டு வயசிலே நன்று நரைச்சிடுச்சுன்னு ஒருத்தரை வெறுக்கறது சரீங்களா?
சரியோ, தப்போ எனக்குப் பிடிக்கலே. உன்னை போய்த் தொலே.


அதே மாதிரி கொஞ்ச நாளிலே எனக்கு இரைக்க ஆரம்பிச்சிடுச்சுன்னு என்னை ஒதுக்க ஆரம்பிச்சுடுவீங்களா?
ஐயோ! அன்னாண்ட போயேன்.


உங்க பிசினெஸ் ஐஸ்கிரீமுங்க. காசையும் ஐஸ்கிரீமையும் நில கண்டவன் கிட்டே விட்டா வேகமா கரைச்சிடுவானுங்களே!


சூடேறிய 'ஜில்ஜில்'லின் கவனத்தை டெலிபோன் அடித்துத் திருப்புகிறது.
ஹலோ! ஆமாம் ஜில்ஜில் ஐயர்தான் நான் பேசறேன். என்னது சாமியார் வரு அமாவாசை அன்னிக்குப் பார்க்கச் சொன்னாரா? ஏதோ கனகம் அம்மா ஆகிற ஆசை நிறைவேறிச்சு சரி....
தொடரும்



ரொம்ப நாள் கழித்து முக்கோணக் காதல் கதை. டைரக்டர் மொஹியுத்தீன் வெகு ஜாக்கிரதையாய்ச் சப்ஜெக்டைத் தேர்ந்தெடுத்திருப்பதும் முற்றிலும் உணர்ச்சிக் காட்சிகளைக் காட்டிக் கொண்டு இன்றைய ரசிகனின் பொறுமையைச் சோதிக்க விரும்பாமல் ஜனரஞ்சகமான சண்டைக் காட்சிகளையும், மூன்றாம் பிறை ஸ்டைலில் ஒரு கிளுகிளு க்ரூப் டான்ஸையும் செருக வேண்டிய இடத்தில் செருகியிருப்பதும் புத்திசாலித்தனம். சவசவத்துப் போன வார்த்தைகளை வைத்துக்கொண்டு வரிசையாய் வசனங்களைக் கேட்டுச் சலித்துப்போன நமக்கு உயிரோட்டமான பளிச்சென்ற வசனங்களைக் கேட்கிற போது வெகு திருப்தியாய் இருப்பதையும் சொல்ல வேண்டும்.

கிராமம் (மலைப்பாதைகளும் தேயிலைத் தோட்டங்களும் பின் எப்படித்தான் படத்தில் வரமுடியுமாம்?) ஒன்று. டீக்கடையில் ஒரு துடுக்குப்பெண். அவளை, காதலிக்கும், காதலிக்கப்படும் லாரி டிரைவர். அவள் வயிற்றில் சுமையை ஏற்றிய கையோடு எதிர்பாராத காரணங்கள் வந்து அவளைக் கல்யாண நாளன்றைக்குப் பிரித்து விட, பிறக்கிற குழந்தை ஒரு மருத்துவமனையில் அனாமத்தாகக் கிடத்தப்படுகிறது. அந்தத் தாய் அங்கேயே அடையாளம் சொல்லிக் கொள்ளாமல் நர்ஸாகச் சேர்கிறாள். வருகிறார் ஒரு புது டாக்டர், உடம்பைப் போலவே பரந்த மனசுடன். அப்புறம்?

விட்டுப் போன முதல் காதலன் எப்பொழுதடா திரையில் வரப் போகிறான் என்று ஆரம்பத்திலிருந்தே காத்திருக்கிறோமா. அதே மாதிரி இவர்களுக்குக் கல்யாணம நடக்கும் போலிருக்கும் சமயத்தில் வந்து சேர்கிறான். யார் தியாகம் செய்யப் போகிறார்கள் என் பதிலும் தமிழ் மரபு தெரிந்தவர்களுக்கு சந்தேகம் கிடையாது.

சரத்பாபு



ஜோதி ராஜேஷ்

என்கிற முக்கோணத்தில் சீனியர் நடிகரும் ஜூனியர் நடிகரும் சளைக்காமல் சரியான விகிதங்களில் உணர்வுகளைக் காட்டி நிறைவு தருகிறார்கள். ஜோதியும் நன்றாய் அழுகிறார்தான். ஆனால் அந்த முகத்தில் இருக்கும் முதிர்ச்சிக்கும் – பாவாடை தாவணி இளமைத் துடிப்புக்கும் – எத்தனை கடல்களைத் தாண்டினாலும் முடிச்சுப் போட்டுப் பார்க்கக் கஷ்டமாயிருக்கிறது.

இளையராஜாவின் இரண்டு பாடல்கள் அவருடைய பழைய ட்யூன்களைத் தழுவிய இன்ஸ்பிரேஷனானாலும் கேட்கிற போது சுகமாகத்தான் இருக்கிறது.

ஜூனியர் பாலையா(ரகு) பற்றி குறிப்பிடாமல் விட்டால் ஏழு ஜன்மப்பாவம். காமெடி டிராக்கில் வந்து கதாநாயகியைக் காதலிப்பவர். கட்டாயத் தாலி கட்டாமல் பெருந்தன்மையான தியாகத்துடன் நாயகியை அவள் காதலனுக்கே விட்டுக் கொடுக்கிற கட்டத்தில் அவசரமும், பெருமையும் மெலிதான துக்கமுமாய் அவர் ஜமாய்ப்பது படத்துக்கு ஒரு தனி களை.

சரக்கு இருக்கிறது சுவையாய் பரிமாறவும் தெரிந்திருக்கிறது என்பதே ஆறுதலான விஷயமில்லையா?

–ஜெயமன்மதன்



# வாழ்க்கை



ஹிந்தியில் எடுத்த படம். தமிழாக்கி இருக்கிறார்கள்.

உணர்ச்சிக் கொந்தளிப்பில், வார்த்தைத் தடுமாறல்களில், அழுகைச்சிதறல்களில் சிவாஜி, சிவாஜி, சிவாஜிதான்! படம் முழுக்க அத்தனை பேர்களும் அழுதாலும் சிவாஜிக்கு மட்டும் அழுகைக் காட்சிகளில் கண் ஏகமாய்ச் சிவக்கிறதே, எப்படி என்று வண்ணங்களில் படம்வெளியாக ஆரம்பித்த காலத்திலிருந்து தோன்றிய சந்தேகம் — இன்னமும் இருக்கிறது. இந்தப் படத்திலும் இருக்கிறது.

ஒரு சின்னத் தலையாட்டல் ஆகட்டும், அழுகையோடு குரலையும் சே. த்து இழைய வைக்கிற திறனாகட்டும், அந்தப் பணக்கார மிடுக்காகட்டும், அந்த ஏழ்மைத் தொய்வாகட்டும்-சிவாஜியின் ஒரிஜினல்நடிப்பு, சிவாஜியின் ஒரிஜினல் நடிப்பென்று கூடக் கூட இளிப்பிள்ளை திணுசாய்ச்சொல்லிக் கொண்டே வருகின்றன படம் முழுக்க. இந்த வாழ்க்கையில் சிவாஜி இல்லை. ராஜசேகர் வாழ்கிறார், நெகிழ்கிறார், அழுகிறார் — இதற்கு முடிவில்லை, சொல்லிக் கொண்டே போகலாம்.

இனி மற்ற விஷயங்கள்:

சொந்த உழைப்பால் முன்னேறிய ஒருவனை எப்படி அவன் பிள்ளைகள் காலைவாரி விடுகிறார்கள், எப்படி காலைவாரி விடப்பட்டவன் மீண்டும் நிமிர்ந்து நிற்கிறான் —ஒன்லைன் ட்ரீட்மெண்ட் படி கதை இதுதான். சம்பவங்கள், மறுபடி சம்பவங்கள் என்று மிகச் சிராகச் சொல்லிக் கொண்டு போகிறார்கள். அட, ஹிந்தியில் கூட இந்த மாதிரி கண்ணீர்க் கதைகள் எல்லாம் உண்டா என்ன?

அம்பிகா, நம்பியார், ரவீந்தர், வி. கே. ராமசாமி, மனோரமா, ஜெய்சங்கர், ரவி, சிலுக்குஸ்மிதா என்று எல்லோருமே ஸப்போர்டிங் காரெக்டர்கள், கதைக்கு, யாரும் குறை வைக்கவில்லை.

(ஒய். விஜயாவின் மரக்காயர் பாணி தமிழும் (சைத்தான், நீ 'வாப்பா' இட்ட போ.) நடிப்பும்— ம்ம்ம் இனிமேல் இந்த மாதிரியான ரோல்களுக்கெல்லாம் பொருத்தமான ஆசாமி கிடைத்தாகி விட்டது.

பகட்டான காரில் மிடுக்கான (மிகக்கனமான) சிவாஜி வருவதும், அவரை நான்கு 'குடி'காரர்கள்வழி மறிப்பதும், அவர்களுடன் ஒற்றைக் கையுடனும், அவ்வளவு பெரிய வளையாத உடம்புடனும் சண்டை போட்டு சிவாஜி விரட்டி அடிப்பதும்; என்ன டைரக்டர் ஸார் இது? —யாராவது சண்டை வேண்டுமென்று கேட்டார்களா என்ன? (டைரக்ஷன் — தமிழில்சி.வி. ராஜேந்திரன்.) எதற்கு இடமென்று இந்தக் 'காதில பூ' சமாசாரம்?

'கைகேயி வாக்குக் கேட்டா, கொடுத்ததுக்கப்புறம் தசரதன் என்ன ஆனான் தெரியுமா?' — அழுத்தமான வசனம். படம் நெடுக பஞ்சு அருணசலம் இந்த டைப்பில் நிறையவே தெளித்திருக்கிறார்.

ரஜீத் பாய் வெளியில் பெருமையாகப் பேசிக் கொள்வதும், வீட்டில் இடிசோறு உண்பதும், குட்டு வெளிப்படுவதும், பையன் அவரை விட்டு(தூரத்தப்படுவதால்) வெளியேறுவதும் திமர்ப் பணம் வருவதும், மகன் மறுபடி 'பாசத்துடன்' வருவதும், அவனைத் துரத்தி அனுப்புவதும் — இந்த நெடுங்கதையில் சொல்லப்பட்ட தானான சிறுகதை. வி.கே. ராமசாமி, ஒய். விஜயா, ஒய். ஜி. மகேந்திரன், காம்பினேஷன் டாப்கிளாஸ்.

திருஷ்டிப் பொட்டு — இளையராஜாவின் இசை. ஏனோ தெரியவில்லை, ஒட்டவேயில்லை (ஸாரி— ஒலிக்கவேயில்லை).

பாசமலர், பார் மகளே பார், பாவ மன்னிப்பு — காலகட்டப் படமென்று ஓங்கூட, அழுவதில் ஆனந்தம் கொள்கிற தாய்க்குலத்திற்காக என்று வந்திருக்கிறபடம். ஆனந்தமாக அழலாம்!

-ஜெயமன்மதன்



# அத்தியாயம் 25

## செம்பியன் தமிழவேள்

அபிமானவல்லியிடமிருந்து கிடைக்கப் போகும் செய்திக்காகத் தஞ்சையின் மற்றொரு பகுதியில் காத்திருந்த பாண்டிய ஒற்றனிடம் தாணுரவி அனுப்பிய புறா போய்ச் சேர்ந்தது. அது சுமந்து வந்த ஓலையை ஏற்கெனவே சேரமான் படித்து விட்டான் என்பதையோ, அதையொட்டி அபிமானவல்லி அவள் மாளிகையிலேயே சிறை வைக்கப்பட்டிருக்கிறாள் என்பதையோ அறியாதவனாக அந்த ஒற்றன் தாமதமின்றிச் செயல்பட்டான். அபிமானவல்லி எழுதி விருந்த யோசனையை ஏற்று, பாண்டியன் பராந்தக வீரநாராயணன் பெண்ணாகடம் நகரை நெருங்கிய போது அவனைத் தனது பெருஞ்சேனையோடு காத்திருந்து சந்தித்தான் தாணுரவி. இதனைச் சற்றும் எதிர் பார்க்கவில்லை பாண்டியன். தனது ஒற்றர்கள் மூலமாக அபிமானவல்லி பற்றியும் அவளது உள்நோக்கங்கள் குறித்தும் ஏற்கெனவே அறிந்திருந்த அவனுக்கு ஒரே திகைப்பும் வியப்புமாக இருந்தது. பல்லவேந்திரனின் வலக்கரம் என்று கருதத்தக்க அபிமானவல்லியா ஏமாந்து போனாள்? அல்லது அபிமானவல்லியால் நாம்தான் வஞ்சிக்கப்பட்டிருக்கிறோமா? ஒன்றும் புரியவில்லை வீரநாராயணனுக்கு. இருப்பினும் தனது மனக்குழப்பத்தைக் காட்டிக்கொள்ளாமல் மீனக்கொடியோன் தனது மெய்க்காவலர் அறுவருடன் சேரமானைப் பார்த்து வரப் புறப்பட்டான். படைகளைப் பின்தங்க வைத்துத் தனியே வரும் பாண்டியனைப் பாசறையில் வரவேற்றான் தாணுரவி. இப்போது பாண்டியனின் நடத்தை சேரனுக்குப் புதிராயிருந்தது.

"பெரும்படையுடன் தாங்கள் பெண்ணாகடம் வந்திருப்பதாகச் செய்தி எட்டியது. உடனே என்னமோ ஏதோ என்று கவலைப் பட்டுக் கொண்டு ஓடி வந்தேன். ஏதாவது உதவி தேவையென்றால் நிறைவேற்றி வைக்கிறேன். எனது சைன்யமும் சித்தமாயிருக்கிறது" என்றான்.

கதையை அப்படியே திருப்பிப்போட்டு விட்ட பாண்டியன் மீது சினம் பொங்கினாலும் அவன் சாமர்த்தியத்தையும் மனத்துக்குள் மெச்சினான் தாணுரவி. இதற்கு என்ன பதில் கூறி எப்படிச் சமாளிப்பது?...

"வடதிசையில், படையெடுத்துச் சென்றுள்ள ஆதித்தனை வழியனுப்ப வந்தேன்; இப்போது வஞ்சிக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறேன்" என்றான். "வானவன்மாதேவி நலமாயிருக்கிறாளல்லவா?" என்று பாண்டியனின் பட்டத்து அரசியாகிய சேரகுல நங்கை பற்றி விசாரித்தான். விருந்தளித்து உபசரித்தான். ஆடலும், பாடலும் தொடர்ந்தன. மறுநாள் பிரிந்தனர்.

தலைநகர் திரும்புவது போல் போக்குக் காட்டிவிட்டுச் சற்றுத் தொலைவிலிருந்து கண்காணித்தான் சேரமான். ஆத்திரமுற்றிருந்த பாண்டியன் அவன் அப்பால் சென்றதுமே பெண்ணாகடம் நகரைத் தாக்கி அழித்துச் சூறையாட ஆரம்பித்தான். மக்கள் பீதியுடன் சிதறி ஓடத் தொடங்கினர்.

பற்றத் தொடங்கிய தீ வெகுதூரம் பரவ சேரமான் அனுமதிக்கவில்லை. வீரநாராயணனின் வஞ்சனையுடன் கூடிய வெறிச் செயலை முளையிலேயே கிள்ளி எறிந்தான். ஆவேசத்துடன் தாணுரவி பாய்ந்த போது அவன் தாக்குதலை ஏற்கக் கூட பாண்டியன் தாமதிக்கவில்லை. தன் படை வீரர்கள் பின் தொடரப் புறமுதுகிட்டு ஓடிவிட்டான். மதுரை நோக்கிச் செல்லும் அவனை விரட்டிக் கொண்டு போய்ப் பாடம் கற்பிக்கச் சேரமானுக்கு மனமில்லை. உறவு முறை குறுக்கே நின்றது. அதையும் மீறிச் செயல்பட்டால் வானவன்மாதேவிக்குப் பாண்டியனால் துன்பங்கள் நேரலாம். இதையெல்லாம் உத்தேசித்துப் பெண்ணாகடம் மக்களுக்கு ஆறுதல் கூறிய பின் உதவிக்கும் பாதுகாப்புக்கும் சேர வீரர்களையும், தளபதிகளையும் இருக்கச் செய்து விட்டுத் தஞ்சை திரும்பினான்.

காஞ்சியில் தனது பிரம்மாதிராஜர்களை ஆட்சிப் பொறுப்பில் அமர்த்திய ஆதித்தன், அவர்களுக்குப் பக்கபலமாகத் தன் சைன்யத்தில் ஊக்கம் குன்றியிருக்கும் பகுதியினரைப் பின் தங்க ஆணையிட்டு விட்டு, மற்ற பெரும்பான்மை வீரர்களுடன் தஞ்சை நோக்கிப் பயணத்தைத் தொடங்கினான். சில காலம் சென்று மீண்டும் காஞ்சிக்கு வந்து மகுடாபிஷேகம் செய்து கொள்வதாகத் திட்டம் வகுத்தான். அதற்குள் பல்லவ நாட்டினர் யுத்தத்தின் கொடுமைகளை மறந்திருப்பார்கள். உடலின் ரணங்களுடன் மனப்புண்களும் ஆறியிருக்கும். சோழரின் ஆட்சிமுறைச் சிறப்புக்களையும் அதனால் தங்கள் வாழ்க்கை வளம்பெறுவதையும் உணர்ந்திருப்பார்கள். மகுடாபிஷேகத்துக்கெனக் குடும்பத்துடன் மறுபடியும் ஆதித்தன் வரும்போது அவனுக்கு மகத்தான வரவேற்பு அளித்துக் குதூகலிப்பார்கள். ஆதித்தனுடன் திரிபுவனியும் அவன் மனைவியாகவே வருவதானது அவர்கள் மகிழ்ச்சியை அதிகரிக்கச் செய்யும்.

மாபெரும் வெற்றி பெற்றுத் திரும்பும் ஆதித்தனுக்குச் சோணாட்டின் எல்லையிலேயே மக்கள் ஆரவார வரவேற்பு நல்கத் தொடங்கி விட்டார்கள் எனினும் அதனால் பிரயாண வேகம் அவ்வளவாகத் தடைப் படவில்லை. ஆனால் தஞ்சையிலிருந்து ஒரு காத தூரம் முன்பிருந்தே தலைநகர மக்கள் திரண்டு நின்றபோது ஆமை வேகத்தில் தான் முன்னேற முடிந்தது.

கொம்புகள் ஊத சங்கங்கள் ஒலிக்க, தாரைத் தப்பட்டைகள் சப்திக்க முரசங்கள் அதிர, மங்கள வாத்தியங்கள் முழங்க, கரகமும், சிலம்பமும் அமர்க்களப்பட ஒரே கோலாகலமாயிருந்தது. ''பல்லவ சோழன் வாழ்க, வெற்றிவேல் வீரவேல்'' என்று மக்கள் குரல் கொடுத்தார்கள் என்றால் கட்டியங்கூறுவோன் இடியோசை தோற்கும் படியான குரலில் ''திருப்புறம்பயத்தில் வரகுணபாண்டியனை புறமுதுகிடச் செய்த வனும், அபராஜிதனை வென்று சோழமண்ட லத்தையும், தொண்டை மண்டலத்தையும் ஒரு குடை நிழலில் ஆள்பவனும் பல்யானைக் கோக்கண்டனுமான இராஜகேசரி கோதண்ட ராம ஆதித்த சோழச் சக்கரவர்த்தி வாழ்க, வாழ்க!'' என்று கர்ஜித்தான்.

மன்னனைத் தரிசித்த கையோடு மக்கள் திரும்பி வரும் வீரரிடையே தங்கள் உற வினரைத் தேட ஆரம்பித்தனர். தங்கை, அண்ணனையும், காதலி காதலனையும், மனைவி கணவனையும் கண்டு கொண்டதும் ஓட்ட மாக ஓடிக் கட்டி அணைத்துக்கொண்டு மகிழ்ந்தார்கள். அந்த ஆர்வத்தைக்கட்டுப் படுத்தவே முடியாததால் ஒரே குழப்பமும் களேபரமுமாக இருந்தது. தலைநகரை நெருங்க நெருங்கக் கடலனைய கூட்டமும் அதிகரித்து விட்டது. அன்று பொழுது சாய்வதற்குள் கோட்டைக்குள் நுழைய முடியுமா என்பது ஆதித்தனுக்கே ஐயமாகிப் போனது.

எப்படியோ, மெல்ல, மெல்ல முன்னேறி நகர வாசலை அடைந்த போது அங்கே அதி காரபூர்வமான வரவேற்பு காத்திருந்தது. மேன் மாடங்களிலிருந்து பெண்கள் மலர் மாரி பொழிந்தனர். வேத கோஷங்கள் எழுப்பிய அந்தணர்கள் பூர்ண கும்பமளித் தனர். திரும்பிய திக்கெல்லாம் புலிக்கொடி பட்டொளி வீசிப் பறக்க இடையிடையே தென்னங்குருத்துத்தோரணங்களும் மாவிலைத் தோரணங்களும் மங்கலமாய் நகரை அழகு படுத்தின. வீடு வாசல்களிலெல்லாம் வண்ணக் கோலங்கள். பட்டத்து யானையை

---

''இளவயதில் அழகான மனைவியை விட்டுவிட்டு புத்தர் சென்றது ஆச்சரி யம்தானே?''

''அதைவிட நாமெல்லாம் இன்னும் போகாமல் இருப்பதுதாண்டா ஆச்சரி யம்''

—ஆர். கோபாலன்.



விட்டு ஆதித்தன் இறங்கியதும் கன்னர தேவன் பெருமிதப் பூரிப்புடன் தந்தைக்கு ஆத்திமாலை சூடினான். பட்டத்தரசி இளங் கோப்பிச்சி ஆரத்தி எடுத்துத் திலகமிட் டாள். மைந்தனை வாரி அணைத்து முத்த மிட்ட ஆதித்தன் அதேபோல் எழில்களின் உறைவிடமாகத் திகழும் இளங்கோப்பிச்சி யிடமும் நடந்து கொள்ள வேண்டும் என்று பொங்கி எழுந்த ஆசையைப் பிறிதொரு தருணத்திற்கென்று மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான்.

தானுரவி ''நண்பரே! மாபெரும் வெற்றி பெற்று வந்துள்ளீர்! ஆதவன் உள் ளளவும் ஆதித்தன் புகழ் நிலைக்கும்!'' என்றான். ஆரத் தழுவினான்.

''ஆதித்தனின் வெற்றிகளுக்கெல்லாம் ஆதிகாரணம் நீங்கள்தானே! சேரனுட் டைப் பகைவரிடமிருந்து காக்கத் தாங்கள் இங்கிருக்காது போனால் நான் எப்படி வடதிசைப் படையெடுப்பை நிகழ்த்தி யிருக்க முடியும்? கடம்பமாதேவியின் போர் நுணுக்கத் திறனும் ராஜதந்திரங்களும் இன்றி என்னால் எதைச் சாதித்திருக்க இயலும்?'' பேசிக் கொண்டே இருக்கையில் தேடிக் கொண்டும் இருந்தான் ஆதித்தன். ''அவள் எங்கே? வெற்றித் திருமகளான கடம்பமாதேவி என்னை வரவேற்க ஏன் வர வில்லை?''

இதற்குள் நம்பியாண்டார் நம்பி ஓரடி முன்னால் வந்து ''சக்கரவர்த்தி கலங்க வேண்டாம், காலனைக் காலால் உதைத்த மகேசன் அருளால் கடம்பமாதேவி நலம் பெறுவாள். மருத்துவரின் ஆற்றலும் திரு நீற்றின் சக்தியும் அவளைக் குணப்படுத்தும்'' என்றார்.

ஆதித்தன் முகத்தில் கவலையும் கலவரமும் படரக் கண்டு தானுரவி ''நண்பரே எவ்வளவோ நிகழ்ச்சிகளைப் பற்றி இங்குள்ள நாம் ஒருவரை ஒருவர் விரிவாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அரண்மனை சென்று ஆற அமரப் பேசலாம். இப்போதைக்கு நடந்ததை ரத்தினச்சுருக்க மாய்க் கூறுகிறேன்'' என்று ஆரம்பித்து அபிமானவல்லியைத் தானும் கடம்பமாதேவியும் காணச் சென்றதுமுதல் பாண்டியனைப் புறமுதுகிடச் செய்து தான் திரும்பியது வரை அனைத்தையும் வார்த்தை சிக்கனத்துடன் கூறி முடித்தான்.

''நண்பா, நட்பென்னும் உரைகல்லில் உறவென்னும் பொன்னை உரசிப்பார்த்த உன் வீரத்தை மெச்சுகிறேன். இதற்கெல் லாம் நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்'' என்று கூறிய ஆதித்தன் மறுமுறையும் தானுரவியை ஆலிங்கனம் செய்து கொண்டான். பிறகு நம்பியை நோக்கி, ''புலவர் பெருமானே தாங்கள் குலாந்தகனை எப்படித்தான் மயக்கினீர் களோ தெரியவில்லை, சதா உங்கள் நினை வாகவே இருந்தான். யுத்த களத்தில் பகை வரை வேட்டையாடாத நேரத்திலெல்லாம் ஓலைச் சுவடிகள் வேட்டை நடத்திக் கொண் டிருந்தான். எந்தக் கோயில் அல்லது தமிழ்ப் பள்ளியைக் கண்டாலும் சரி, அங்கே

மூவர் பாடிய தேவாரங்கள் கிடைக்குமா என்று தேடினான்...''

இப்படி ஆதித்தன் கூறி வருகையிலேயே பெரிய மூட்டை ஒன்றைப் பயபக்தியுடன் தலையில் சுமந்து வந்தான் குலாந்தகன். அதனுள்ளிருந்து நாலு மூலைகளிலும் உயர்ந்த வெண்பட்டினிடையில் ஓலைச் சுவடிக் கட்டுக்கள் எட்டிப்பார்த்தன. மூட்டையை அனுதினமும் பூஜித்துப் பாதுகாத்து வந்திருப்பதை அதன் மீது தெளித்திருந்த சந்தனமும் இட்டிருந்த குங்குமமும் தூவியிருந்த மலர்களும் தெரிவித்தன.

மூட்டையை நம்பியின் காலடிகளில் இறக்கி வைத்துக் குலாந்தகன் வணங்கவும் நம்பியின் கண்கள் நீர் சொரிந்தன. ஆனந்தத்தில் நாத்தழுதழுக்க ''அப்பனே, குலாந்தகா போரின் உக்கிரத்தினிடையிலும் தமிழ்ப்பணி புரிந்த உன்னைத் தமிழவேள் என்றழைக்கிறேன்'' என்றார்.

''சோழனுக்கு உதவியதால் செம்பியன் என்னும் பட்டம் வழங்குகிறேன். செம்பியன் தமிழவேள் என்று இனி இவன் குறிப்பிடப்படுவான்'' என்றான் ஆதித்தன். ''தவிசும், சாமரையும், சிவிகையும், திமிலையும், கோயிலும், இறையிலி நிலமும் பரிசளிக்கிறேன்.''

''நானும் என் பங்குக்கு எக்காளமும், களிற்று நிரையும் வழங்குகிறேன்'' என்றான் தாணுரவி.

உடனே கன்னரதேவன் தன் நெஞ்சைப் போர்த்தியிருந்த புத்தம் புதிய பொன்னாடையை எடுத்துத் தாயிடம் தர அதை இளங்கோப்பிச்சியிடமிருந்து பெற்றுக் கொண்ட ஆதித்தன் அங்கேயே அப்போதே குலாந்தகனுக்கு அதைப் போர்த்திக் கௌரவித்தான். ''செம்பியன் தமிழவேள், வாழ்க'' என்று சேரமான் உற்சாகமாய்க் குரல் கொடுக்கவும் நூற்றுக்கணக்கான கண்டங்கள் அதனை எதிரொலித்தன.

''ஐயா! இந்தப் பெருமையெல்லாம் தங்களுடையதே'' என்று நம்பியின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான் குலாந்தகன். ''விரக்தியில் ஆழ்ந்து சூன்யத்திலும் இருளிலும் உழன்ற என்னை வெளிச்சத்துக்குக் கொணர்ந்து தென்றலை அனுபவிக்கச் செய்தீர்கள். என் வாழ்க்கையை மறுபடி அர்த்தமுள்ளதாக்கியவரே தாங்கள்தானே?''

''அப்பனே! நான் என்ன பெரிதாக உனக்கு உதவி விட்டேன்'' என்றார் நம்பி. ''குறளப்பரின் இருப்பிடத்துக்கு வழிகாட்டி உன்னை அழைத்துப் போனது ஒன்றுதான் என் பணி. குறளப்பர்தான் உன் வாழ்க்கைக்கு வழிகாட்டினார். நீ நன்றி தெரிவிக்க வேண்டியதும் அவருக்குத்தான்!''

''ஆம் ஐயா, உண்மைதான்; அவரையும் கூடிய சீக்கிரமே சந்தித்து...'' என்று கூறி வரும்போதே தன்னைச் சூழ்ந்திருந்த இரு மன்னர்கள் முகங்களிலும் நம்பியின் வதனத்திலும் கள்ளப் புன்னகைகள் அரும்பக் கண்டு வாக்கியத்தை முடிக்காமல் தயங்கி நிறுத்தினான்.

புன்முறுவல்கள் பெரும் நகைப்பொலிகளாக மாறவும் அதனூடே ''விரைவில் சந்திப்பதாவது அதுதான் நேருக்கு நேர் பார்த்துக் கொண்டே இருக்கிறாயே!'' என்றார் நம்பி.

''என்னது!'' என்று வியப்புடன் திரும்பிப் பார்த்தான் குலாந்தகன்.

''விக்கியண்ணா இன்னுமா நீ புரிந்து கொள்ளவில்லை?'' என்றான் ஆதித்தன் இல்லாத தாடியை உருவிக் கொடுத்தவாறே. மூவர் கண்களிலும் குறும்புத்தனம்!

''பிரபோ!'' என்று கரம் கூப்பிக் கூவிக் குறுகினான் விக்கியண்ணன். ''இந்த நாடகம் எதற்கோ நான் அறியேன். அது எப்படியானாலும் என்னைத் தாங்கள் மன்னித்து விட்டதாகப் பொருள் கொள்ளலாமா நான்?''

''நீ குற்றமே புரியாதபோது மன்னிப்பதாவது, தண்டிப்பதாவது?'' என்றார் சக்கரவர்த்தி.

''ஐயா எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் குற்றமற்றவன் என்றால் ஏன் இவ்வளவு சோதனைகள் எனக்கு?''

''சொல்கிறேன்'' என்றார் மாமன்னர். ''மக்களின் வரவேற்பை ஏற்று முன்னேறியபடியே பேசுவோமா?''

நம்பியும் அரசியும் சிவிகைகளில் ஏற மற்றவர்கள் குதிரைகள் மீது ஆரோகணித்தனர். வழிநெடுக ஆதித்தன் கூறி வந்த விவரங்கள் விக்கியண்ணனைத் திகைப்பில் ஆழ்த்தித் திக்குமுக்காட வைத்தன.....

திருப்புறம்பயத்தில் ஆதித்தேசுவரம் உருவாகி வருகையில் மேற்பார்வை இடச் சென்ற விக்கியண்ணனை வெகு எளிதாகத் தன் காதலனாக ஏற்று அபிமானவல்லி நெருங்கி உறவாடுவதைப் பார்த்தபோதே ஆதித்தனுக்கு ஐயம் ஏற்பட்டது. அவளுடைய பூர்வோத்தரம் யாருக்கும் தெரியாது. கொங்கு நாட்டிலிருந்து வந்தவள், சிற்பிமகள், கலைகளில் வல்லவள் என்று அவள் கூறிக் கொண்டாலும் பல்லவ தேசத்திலிருந்து வந்திருக்கலாம் என்று தோன்றியது. அவளைச் சோதித்துப்பார்க்கக் கருதி ஆதித்தன் அவள் அழகில் கட்டுண்டது போல் நடித்து சரசமாடவும், அவள் அதிகமான தயக்கமோ மனப்போராட்டமோ




''இந்த நாவலின் 'க்ளைமாக்ஸ்' 'பவர் ஃபுல்'லா இல்லையே?''

''எழுதி முடிக்கும் போது பவர் ஃபெயிலியர் ஆயிடுத்து சார், அதனால் தான்.''

—சீதா.

வெளிப்படுத்தாமல் விக்கியண்ணனைத் துறக்கவும் ஆதித்தனை ஏற்கவும் சித்தமானாள். குன்றிமணி மன்னரின் மகுடத்தில் பதிக்கப் பெற விரும்பியது போல அவள் நடந்து கொள்ளவும் ஆதித்தனின் சந்தேகம் உறுதிப் பட்டது. அவன் ஒற்றர் தலைவன் சாத்தனை அவளைப் பற்றி அறிய ஏவினான். ஒரு வணிகனாக வெளியுலகில் நடமாடிவந்த சாத்தன் அந்தரங்கப் பணியாக ஒற்றர் தலைவன் பொறுப்பேற்றிருந்தான். அவன் அவளைப் பற்றிய உண்மைகளை எப்படியோ அறிந்து கொண்டது மட்டுமல்ல தனக்குத் தெரிந்து விட்டது என்பதை அவளிடம் கூறி அவளை மிரட்டி அடிபணிய வைக்கவும் முயன்றிருக்க வேண்டும். அதனால் கோபமுற்ற அபிமானவல்லி சாத்தனைக் கொன்று விக்கியண்ணன் மீது பழி சுமத்தியும் விட்டாள். இதன் மூலம் ஒரே வீச்சில் தன்னையும் காத்துக்கொண்டு, ஒற்றர் தலைவனையும் ஒழித்துக் கட்டி, அதே நேரத்தில் தலைசிறந்த தளபதியாகிய விக்கியண்ணனைச் சிறையில் தள்ளியதன் விளைவாகச் சோழநாட்டின் படைபலத்தையே வெகுவாகக் குறைத்தும் விட்டாள்! இதற்கு, முன்பு எப்போதோ ஞாபக மறதியாக அவள் மாளிகையில் விக்கியண்ணன் விட்டுச்சென்ற குத்துவாள் உதவியது.

அவள் உள்நோக்கங்களைப் புரிந்துகொண்டு விட்டான் ஆதித்தன். சாத்தனுக்குப் பதில் தானே ஒற்றர் தலைவன் பொறுப்பேற்றான். எந்தப் பல்லவன் சார்பாக இங்கே வேவு பார்க்க வந்து சோழ மன்னனையே மயக்கி தன்னிஷ்டப்படி ஆட்டிவைக்கப் பார்த்தாளோ, அந்தப் பல்லவேந்திரனின் அழிவு இவள் மூலமே நேரவேண்டும் என்று உறுதி பூண்டான். அவள் உடல் அழகிலும் கலைத் திறனிலும் தான் மயங்கி மதியிழந்து வருவது போலவே தொடர்ந்து நடித்தான். அதே சமயத்தில் தவறான தகவல்களையும் அவளுக்குக் கூறி வந்தான். அவற்றை அவள் மெய்யெனவே நம்பி வண்ண ஓவியங்களாக அச்செய்திகளைச் சித்திரித்து பல்லவேந்திரருக்கு ரகசியமாக அனுப்பி வந்தாள். வியாபாரிகள் போல் நடித்த ஒற்றர்கள் இந்தச் சித்திரங்களை வாங்கிப்போய் அபராஜிதனிடம் சேர்ப்பித்தார்கள். அவனும் சித்திரங்களை ஆய்ந்து ஆதித்தனுக்குப் படையெடுக்கும் எண்ணமே இல்லை என்றும் சோழன் அபிமானவல்லியின் அழகில் மயங்கிக் கிடக்கிறான் என்றும் தனது சேனைத் தலைவனையே இவள் பேச்சைக் கேட்டுச் சிறையில் அடைத்து விட்டான் எனவும், இன்னும் பலவாறாகவும் தவறான அபிப்பிராயங்களை உருவாக்கிக் கொண்டான். பல்லவ நாட்டின் பாதுகாப்பை அலட்சியப்படுத்திக் கலைகளை வளர்ப்பதில் ஈடுபட்டான்.

அபிமானவல்லியை ஏய்ப்பதற்காகவே விக்கியண்ணனுக்குத் தண்டனை வழங்கிய ஆதித்தன் பின்னர் அவள் அறியாதவாறு அவனைத் தப்புவித்து மறுபடி குலாந்தகன் என்ற பெயரில் மாறுவேடத்தில் தன்படைகளுக்குத் தளபதியாக்கிக் கொண்டான். இதற்கு நம்பியும் தாணுரவியும் உதவி செய்ததோடு இதுவரை ரகசியம் காத்து

வந்திருக்கின்றனர். இதெல்லாவற்றையும் விடச் சிரமமாக பழையாறையில் பிரம்மாதி ராஜர்கள் வகுத்த போர்த் திட்டத்தை அபிமானவல்லி அந்தரப்புரத்திலிருந்து திருடி பல்லவேந்திரருக்கு அனுப்பி வைக்க ஆதித்தனே வழி வகுத்தான். சுரங்கப்பாதை பற்றியும் அந்தப் போர்த் திட்டம் அந்தப்புரத்தில் இருப்பது குறித்தும் அவளுக்கு இருவேறு சந்தர்ப்பங்களில் உணர்த்தித் திருடத் தூண்டினான். பின்னால் தஞ்சையில் கடம்பமாதேவி போர்த் திட்டத்தைமாற்றி விட்டது அறியாமல் அபிமானவல்லி பல்லவ வேந்திரருக்குப் பழையாறைத் திட்டத்தை அனுப்ப எல்லாமாகச் சேர்ந்து ஆதித்தனுக்கு மகத்தான வெற்றியைத் தேடித் தந்து விட்டன.

''பிரபோ! அபிமானவல்லியைத் தாங்கள் ஏமாற்றியது சரி, ஆனால் உங்கள் அடிமையாகிய என்னை ஏன் இப்படி வஞ்சித்திருக்க வேண்டும். உண்மைகளை என்னிடமிருந்து இத்தனை காலம் மறைத்து வைக்க அவசியம் என்ன நேர்ந்தது?''

''அழகுதான்! உன்னிடம் எதையும் ஒளிக்காமலிருந்திருந்தால் நீ என்ன செய்திருப்பாய்? யோசித்துப் பார்! ஒன்று.சே! இப்படிப்பட்ட ஒரு மோசக்காரியை நய வஞ்சகியையா காதலித்தோம் என்று மனமுடைந்து போயிருப்பாய். அல்லது அவளை இப்போதே கொன்று விடுகிறேன் என்று ஆத்திரத்துடன் புறப்பட்டிருப்பாய். எப்படிப் பார்த்தாலும் காரியம் கெட்டிருக்கும். எனது வெற்றி வாய்ப்புக்கள் வெகுவாகக் குறைந்து போயிருக்கும். உன் குணம் எனக்குத் தெரியாதா?''

''மெய்தான்'' என்று தலைகுனிந்தான் விக்கியண்ணன்.

அரண்மனை வாசலில் குதிரையை விட்டிறங்கியிருந்தார்கள். அவனைப் பரிவோடு தட்டிக் கொடுத்துத் தேற்றினான் ஆதித்தன். ''உனக்கு மட்டுமா மனவேதனை? இளங்கோப் பிச்சியை எண்ணிப்பார். அபிமானவல்லியை ராஜநர்த்தகியை, உன் காதலியை நான் மோகித்து என் தகுதிக்குப் பொருந்தாத விதத்தில் கீழ்த்தரமாக நான் நடந்து கொள்வதாக எண்ணி எவ்வளவு மனக் கலக்கம் அடைந்திருப்பாள்!''

''யுத்த நிலைமையின் முக்கியத்துவம் கருதி மகாராணியிடமும் ரகசியம் காத்திருக்கிறீர்கள்! பிரபோ, தாங்கள் இனியேனும் மகாராணிக்கு எல்லா விவரங்களையும் கூறி ஆறுதல் அளிக்க வேண்டும்!''

''நீயும்தான் கடம்பமாதேவியை இந்நாள் வரை ஏற்காமல் நிராகரித்து வந்ததற்காக வருந்தி, அவளை அணுகிச் சமாதானப்படுத்த வேண்டும்.''

''ஆகட்டும் பிரபோ!'' என்ற விக்கியண்ணன் இளங்கோப்பிச்சி வழிநடத்திச் செல்ல கடம்பமாதேவி சயனித்திருந்த கட்டிலை நெருங்கினான். அவளருகே மஞ்சத்தில் அமர்ந்து அவள் கரத்தைப் பற்றிக் கன்னத்தில் ஒற்றிக் கொண்டான். வெளிறிய தன் முகத்தை அவள் புன்னகையால் ஒளிரச் செய்தாள்.



அவர்: ''என்ன கதை எழுதற என்னைப் போய்த் தமிழ் நாட்டுப் பிகாஸோன்னு புகழறீங்க?''

இவர்: ''ஆமா, அவர் வரையற ஓவியமும் யாருக்கும் புரியாது.... உங்க கதையும் யாருக்கும் புரியாது.''

—உ. ராஜாஜி.

---

''எல்லாம் கேள்விப்பட்டேன். எங்கள் வெற்றிக்காக நீ யோசனை கூறி உதவியதுடன் இந்தத் துன்பத்தையும் தாங்க நேர்ந்ததே!''

''அது என் பாக்கியம்'' என்றாள்.

''இப்போது எப்படி இருக்கிறது?''

''தங்களைக் கண்டதும் வலி மறந்தது. அருகில் வந்தமர்ந்ததும் காய்ச்சல்குறைந்தது. உடல் குளிர்ந்தது. என் கரத்தைத் தாங்கள் பற்றியதும் புது ரத்தம் சுரந்தாற் போல் பலம் பிறந்தது...''

குனிந்து நெற்றியில் முத்தமிட்டான்.

''இப்போது?''

''உங்களைக் காதலனாகப் பெற்றுவிட்டதால் காலன் என் மீது வைத்துள்ள பாசத்தை உதறித் தள்ளி விடுவேன். அவனை விரட்டி அடிக்க எனக்கு மேலும் உதவுங்கள்.''

முத்தங்கள் தொடர அவள் கன்னங்கள் சிவந்தன. உடலெல்லாம் சிலிர்த்து மலர்ந்தாள்.

''விக்கியண்ணனுக்குப் பட்டங்களும், பரிசுகளும் வழங்கினீர்கள். கடம்பமாதேவிக்கு ஒன்றுமில்லையா?'' என்றான் தானுரவி.

''அவனுக்குத்தான் விக்கியண்ணனையே வழங்கி விட்டேனே'' என்றான் ஆதித்தன்.

அந்த இளம் காதலர்களைத் தனியே இருக்க அனுமதித்து இளங்கோப்பிச்சியுடன் அந்தப்புரத்தில் வேறு பகுதிக்குச் சென்றான் ஆதித்தன்.

அதேபோல் மன்னனும் பட்டத்தரசியும் சற்றுநேரம் தனித்துப் பேச வாய்ப்பு ஏற்படுத்தித் தரவேண்டும் என்று கருதியவர்களாய் தானுரவியும் நம்பியாண்டார் நம்பியும் கன்னரதேவனை அழைத்துக் கொண்டு போனார்கள்.

''அன்பே, உனக்கொரு பரிசு பல்லவ நாட்டிலிருந்து கொணர்ந்திருக்கிறேன்'' என்றான் ஆதித்தன்.

''பிரபோ தாங்கள் என்னிடமே திரும்பி வந்து விட்டீர்கள்; இதை விடப்பெரிய பரிசு எனக்கு என்ன கிடைக்கப் போகிறது'' என்றாள்.

''புரிகிறது. பல்லவ நாட்டிலிருந்து மட்டுமல்ல, அபிமானவல்லியிடமிருந்தும்

முழுமையாக உன்னிடமே நான் திரும்பி வந்து விட்டதாகச் சொல்கிறாய் அப்படித் தானே?''

''பிரபோ இந்தப் பிச்சியை மன்னியுங்கள். அரசியல் நோக்கில்தான் நீங்கள் அபிமானவல்லியை அடிக்கடி சந்தித்து வந்தீர்கள் என்பதைச் சரியாகப் புரிந்து கொள்ளும் ஆற்றலின்றி வேதனைகளை வளர்த்துக் கொண்டிருந்தேன்.''

''மகாராணி உன்னிடமிருந்து உண்மையை மறைக்க எனக்கு இப்போது மனமில்லை. அரசியல் காரணங்களுக்காகத்தான் ஆரம்பித்தன சந்திப்புக்கள்; ஆனால் நாளாக ஆக அவள் அழகிலும் உபசரிப்பிலும் ஈடுபட்டு நான் மனோதிடத்தைப் படிப்படியாக இழந்துதான் வந்தேன். நல்லவேளை முழுவதுமாக நான் மதியிழந்து அவளுக்கு அடிமையாகி விடுவதற்குள் படையெடுப்பு நிகழ்ந்து நம் பக்கம் வெற்றியும் சம்பவித்து விட்டது. அவளும் தண்டனைக்குரியவளாகிப் போனாள். நான் தப்பித்தேன்.''

''வல்லியிடமிருந்து வேணுமானால் தப்பலாம். இந்தப் பிச்சியிடமிருந்து என்றுமே தப்ப முடியாது'' என்று சிரித்துக் கொண்டே கூறி அவனை இறுகக் கட்டி அணைத்தாள். ''எங்கே தப்ப முயற்சியுங்கள் பார்க்கலாம்!''

பல யுகங்களாகத் தோன்றிய பிரிவுக்குப் பின் அவள் கரங்களுக்கிடையில் சிறைப்பட்டிருந்த ஆதித்தன் தன்னை விடுவித்துக் கொள்ள நினைக்கவில்லை. மாறாக ''நீ என்னைக் கட்டிப் போடப் பார்க்கும்போது நீயும் என்னிடம் சிறைப்பட்டுத்தானே ஆக வேண்டும்'' என்று கூறி அவளைச் சுற்றி வளைத்த தன் கரங்களை இறுக்கினான்.

நீண்டநேரம் நீடித்த ஒரு மோனமயக்கம் அது. அதன் இறுதியில் ''பிரபோ எனக்கு என்ன பரிசு கொணர்ந்தீர்கள்?'' என்றாள்.

''விலை மதிக்க முடியாத பரிசு; பல்லவேந்திரரின் செல்ல மகள்... திரிபுவனி.''

''அப்படியா. எங்கே அவள்? ஆயுட் காலத்துக்குத் தோழியாகக் கருதிப் போற்றிப் பாதுகாப்பேன்.''

---

''பாரதியாரை எந்த வகையில் எடுத்துக் கொண்டாலும் தீர்க்கதரிசி தான்.''

''எப்படிச் சொல்கிறீர்கள்?''

''இப்போ தேங்காய் விக்கற விலைக்கு அப்பவே ''பத்துப் பன்னிரண்டு தென்னை மரம் வேணும்''னு பாடியிருக்காரே!''

—கிதா.



''அது போதாது பிச்சி!''

அவள் புருவங்கள் உயர்ந்தன. ''தோழியாகப் பாவித்தால் போதாது தான் சகோதரியாகவே மதிக்கிறேன்.''

''அதுவும் காணாது கண்ணே ... அவள்... அவளை...''

''ஏன் தயங்குகிறீர்கள் பிரபோ?''

''பல்லவேந்திரர் மரணத் தருவாயில் என்னிடம் ஒரு வரம் வேண்டினார் ... அதன்படி ...''

''சொல்லுங்கள். பல்லவேந்திரருக்குத் தாங்கள் கொடுத்த வாக்கை நிறைவேற்ற உதவ வேண்டியது என் கடமை.''

''திரிபுவனிக்கும் எனக்கும் பிறக்கும் மகன் எனக்குப் பின் சோணாட்டை ஆள வேண்டும் என்று வரம் கோரினான் அபராஜிதன். அதற்கான அவன் உள்நோக்கங்களைப் புரிந்து கொள்வது உனக்கு எளிது.''

''பல்லவேந்திரரின் இறுதி ஆசையை உங்களால் மறுத்திருக்க முடியாதுதான்.... ஆனால் தங்கள் தந்தைக்குத் தாங்கள் அளித்த வாக்குறுதி...?''

''பல்லவனை வென்று தொண்டை மண்டலத்தைச் சோழ நாட்டுடன் இணைத்து அறுநூறு ஆண்டு அடிமை வாழ்வுக்குப் பழி வாங்குவேன் என்பதற்கு அதிகமாக விஜயாலய சோழருக்கு நான் உறுதிமொழி ஏதும் தரவில்லையே!''

''பிரபோ இதில் எனக்கு ஒரு தடையும் இல்லை. இப்போதே இக்கணமே பட்ட மகிஷி என்ற இந்தக் கௌரவத்தைத் துறக்கச் சித்தமாயிருக்கிறேன்.''

அவன் அதரங்களை விரல்களால் பொத்தினான். ''அதற்கு அவசியமில்லை பிச்சி! திரிபுவனிக்கும் எனக்கும் பிறக்கும் மகன் தானே சோணாட்டின் அரியாசனம் ஏற வேண்டும் என்பது தான் வாக்குறுதியே தவிர திரிபுவனி பட்டத்தரசியாவது பற்றிய பேச்சே எழவில்லை... கண்ணே உனக்கு நினைவிருக்கிறதா? முன்னர் ஒரு சமயம் என் கருத்துக்கு விரோதமாகச் செயல்பட்ட உனக்குத் தண்டனை உண்டென்றும் உரிய சமயம் வரும்போது அதை வழங்குவேனென்றும் நான் கூறவில்லையா...?''

''இதுதான் அந்தத் தண்டனை என்றால் மிகுந்த மகிழ்ச்சியோடு ஏற்கிறேன். கன்னர தேவனும் மறுத்துப் பேச மாட்டான். ஏற்கெனவே அவன் மனம் நம்பியின் அளாவலால் பக்தி மார்க்கத்தில் சென்று கொண்டிருக்கிறது.''

''ஆனால் நீ...? அபிமானவல்லியிடம் நான் பழகியதைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் தவித்தவளாயிற்றே!''

''பிரபோ அதற்கும் இதற்கும் வேற்றுமைகள் இல்லையா? திரிபுவனி பல்லவேந்திரன் மகள். உங்களுக்கு மனைவியாகிச் சோழ சாம்ராஜ்யத்தின் எதிர்காலச் சக்கரவர்த்தியைப் பாரெல்லாம் ஆளும் பராந்தகனைப் பெற்றெடுக்கப் போகும் பாக்கியவதி. அவள் பாலூட்ட; நான் தாலாட்ட. உங்கள் வீர மகனாக வளரப் போகிற சோணாட்டின் இளவரசனை நமக்குப் பரிசளிக்கப் போகும் பேரரசி... பிரபோ!

அவளைக் காண என் கண்களும், மனமும் துடிக்கின்றன.''

ஆதித்தன் கண்கள் பனித்தன. இனித் திருமணம் நடந்து பிறக்கப் போகும் குழந்தைக்கு இப்போதே பெயர் சூட்டும் அளவுக்கு ஆர்வம் காட்டுகிறாள் இளங்கோப்பிச்சி எனில் அவளுக்குத் தன்னிடமுள்ள அன்பின் ஆழம் எத்தகையது என்பதைப் புரிந்து கொண்டு நெகிழ்ந்தான். கரவொலி எழுப்பியதும் வந்து வணங்கிய பணியாட்களிடம் திரிபுவனியை அழைத்து வருமாறு கட்டளை பிறப்பித்தான். கூடவே தாணுரவியும், நம்பியும், கன்னரதேவனும் பிரவேசித்தனர்.

திரிபுவனியைப் பாசத்துடன் வரவேற்று மகிழ்ந்தாள் இளங்கோப்பிச்சி. ''பிரபோ! பல்லவ பத்திரர் கோரிய வரத்தைக் கொடுத்த போது இவள் இத்தனை வனப்புடையவளாய் இருப்பாள் என்று எதிர்பார்த்திருக்க மாட்டார்களே! அவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதாய்த் தாங்கள் எண்ணியிருக்கலாம்; ஆனால் இவளைத் தங்களுக்குக் கன்னியா தானம் செய்ததன் மூலம் அவர்தான் உங்களைப் பெருமைப்படுத்தியிருக்கிறார்'' என்ற இளங்கோப்பிச்சி தன் பாதங்களில் விழுந்து வணங்கிய திரிபுவனியை அன்போடு எழுப்பி, திருஷ்டிகழித்து, உச்சி முகர்ந்தாள்.

மகன் கன்னரதேவனை அருகிலிருத்தி அணைத்த வாறே நடந்த விருத்தாந்தங்களை அவனும் நம்பியும் தாணுரவியும் அறிய மீண்டுமொரு முறை கூறினான் ஆதித்தன்.

''அப்பா! ராஜ்ய பாரத்திலிருந்து என்னை விடுவிக்கும்படியான சூழ்நிலையைத் தங்களுக்கு இறைவனே ஏற்படுத்தித் தந்து என்னை ஆட்கொண்டிருக்கிறான். என் மனம் ஆனந்த வெள்ளத்தில் மிதக்கிறது'' என்ற கன்னரதேவன், நம்பியை நோக்கி, ''புலவர் பெருமானே இப்போது என்ன சொல்கிறீர்'' என்று வினவினான். ''எத்தனையோ முறை என்னைத் தங்கள் பிரதம சீடர்களுள் ஒருவனாய் ஏற்றுத் தங்களுடனேயே எல்லாத் தலங்களுக்கும் அழைத்துப் போக வேண்டும் என்று வேண்டிய போதெல்லாம் அது நடவாதென்றும் நானே நாடாளப் போகும் இளவரசனின் வாழ்க்கை முறையே வேறு என்றும் கூறித் தட்டிக் கழித்து வந்தீர்கள். இனி அந்தக் கவலை ஒழிந்ததல்லவா? தாங்கள் செல்லுமிடமெல்லாம் நானும் வந்து இறைப்பணியும் தமிழ்ப்பணியும் ஆற்றலாமல்லவா?''

நம்பி அவனுடைய முகவாயைப் பற்றிய தம் விரல்களை முத்தமிட்டுக் கொஞ்சினார். ''இந்தப் பால் வடியும் வதனம் எனக்கு பாலகன் ஞானசம்பந்தனையே எப்போதும் நினைவூட்டுகிறது. குழந்தாய், உன் விருப்பப்படியே ஆகட்டும். மன்னர் அனுமதிப்பாரேயானால் எனக்கு நம் திருப்திதான்.''

தலையின் அசைவிலே சம்மதம் அளித்தான் ஆதித்தன். உணர்ச்சி மிகுதியால் பேசக் குரலெழவில்லை அவனுக்கு.

அச்சமயம் அங்கு அவசரமாக வந்தான் விக்கியண்ணன். ''பிரபோ, கலக்கம் தரும் ஒரு செய்தி... அபிமானவல்லி தப்பி ஓடிவிட்டாள்!''

''என்னது!'' என்று அதிர்ந்தான் தாணுரவி. ''எப்படி நடந்தது இந்த மோசடி?''

''பிரபோ'' என்று ஆதித்தனைப்பார்த்தே பதிலிறுத்தான் விக்கியண்ணன். ''தாங்கள் வெற்றித் திருமகளுடன் தலைநகர் திரும்பவும் கோலாகல வரவேற்பில் எல்லோருடைய கவனமும் திசை திருப்பிவிடப்பட்டிருந்த தருணத்தில் அபிமானவல்லி ஆண் வேடம் பூண்டு நழுவியிருக்கிறாள். மாளிகைக் காவலருள் ஒருவனை மயக்கித் தன்னை விடுவிக்கச் செய்து அவனையே தன் வாழ்க்கைத் துணைவனாக்கிக் கொள்வதாகவும் ஆசை காட்டியிருக்கிறாள். இருவரும் குதிரைகளேறிப் பறந்திருக்கிறார்கள். ஆனால் நகர எல்லையை விட்டுக் கொஞ்ச தூரம் சென்றதும் அந்த அரக்கி தனக்கு உதவியவனையே குத்திக் கொன்று விட்டுத் தான் மட்டுமாகத் தப்பிச் சென்றிருக்கிறாள்... பிரபோ, எனக்கு அனுமதி கொடுங்கள். அவள் பாண்டி நாடு நோக்கித்தான் செல்வாள் என்பது உறுதி. எப்படியாவது அவளைக் கண்டுபிடித்துப் பற்றி இழுத்து வந்து உங்கள் காலடியில் தள்ளுகிறேன்.''

அனைவருமே பரபரப்புடன் ஆதித்தன் முகத்தைப் பார்க்க மாமன்னனோ அமைதிப் பெருமூச்சுடன் ''வேண்டாம்'' என்றான் நிதானமாக. ''உன் முயற்சி தோல்வி கண்டால் ஒரு பெண்ணிடம் ஏமாந்ததாக உனக்கு இழுக்கு உண்டாகும். இன்னொன்றையும் நாம் யோசிக்க வேண்டும். என்ன தானிருந்தாலும் அவள் தன்னையுமறியாமலே சோணாட்டுக்குப் பேருதவிகள் செய்திருக்கிறாள். இங்குள்ள மூவரது அபிமானத்துக்கு உரியவளாகவும் விளங்கினாள். அவள் நமக்குத் துரோகம் செய்ய எண்ணினாலும் நாமும் பதிலுக்கு அவளை ஏமாற்றித்தான் நம் காரியத்தைச் சாதித்துக் கொண்டோம். எனவே... நீ அவளைத் தேசப் பிரஷ்டம் செய்கிறேன். இந்தத் தண்டனையே போதும். திரும்பவும் அவள் சோணாட்டுக்குள் அடியெடுத்து வைத்தால்தானே தன் அழிவைத் தேடிக் கொண்டவளாவாள்.''

இந்த முடிவைக் கேட்டு எல்லோருமே நிம்மதி பெற்ற மனத்தினராய் அது முகத்திலும் பிரதிபலிக்க மௌனம் காத்தனர்.

கடந்த கால நினைவுகள் பலப்பல மனத்தில் அலைபாய, நீடித்துக் கொண்டேபோன அந்த நிசப்தத்தைக் கணீரென்று ஒலித்த ஒரு குரல் கலைத்தது. அது கன்னரதேவன் எழுப்பிய மணிவாசக இன்னிசை:

''உற்றாரை யான் வேண்டேன்
ஊர் வேண்டேன்; பேர்வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன்
கற்பனவும் இனி அமையும்
குற்றாலத்(து) அமர்ந்துறையும்
கூத்தாஉன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக்
கசிந்துருக வேண்டுவனே!''





## உலா வர ஓர் உலகம்

● உலகப் பயணம் செய்து விட்டு நாங்களும் இன்று ஊர் திரும்புகிறோம். கட்டுரையின் உயிர்த்துடிப்பும் உணர்ச்சி வேகமும் ஒருங்கிணைந்து எங்களையும் வாஸந்தியின் உலாவில் பங்கு கொள்ள வைத்து விட்டது.
திருக்கோவலூர்.
ஆர். சுப்பாராவ்.

● ''வாசகர்களின் நெஞ்சம் என்னும் ஜங்ஷனிலே வையவன் அவர்களின் வலுவான இம்மேம்பாலம் எக்காலத்திலும் நிலைத்து நிற்கும். உயிர் கொடுத்த ஜெயராஜ் அவர்களுக்குப் பாராட்டு.
ஊரூர் வெளிக்கடை.
பு. ராஜன்

● காசி, ஹரி, ஜெயா, எஸ்தர் போன்ற சித்தாள்களைக் கொண்டு கண்ணியம், பாசம், தியாகம், எளிமை, போன்ற முதல்தரமான கலவையால் ஒரு உறுதியான மேம்பாலத்தைச் சமைத்துக் கொடுத்து விட்டார் வையவன்.
மதுரை—3
திருமதி. தேவஜோதன்.

● 'வாஸந்தி' அவர்கள் 'உலா வர ஓர் உலகம்' தொடர் கட்டுரை மூலம் பயணக் கட்டுரைகள் எழுதுவதிலும் தனி இடத்தைப் பிடித்துக் கொண்டார்.
சென்னை—57.
இரணியல் 'கலை'.

● ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம் தொடர்கதையில் ஹரி பாத்திரப்படைப்பு மனத்தில் ஒரு கனமான இன்ப அழுத்தம் தந்தது.
சிதம்பரம்
பால. தேவசேனாபதி.

● ''என் நாட்டில் எத்தனை பிரச்னைகள் இருந்தாலும் அவற்றுடன் போராடிக் கொண்டிருப்பதே எனக்கு திருப்தி தரும் விஷயம்'' என்ற வாஸந்தியின் வரிகள் அவரின் தாய்நாட்டுப் பற்றைத் தெளிவாக எடுத்துக்காட்டி என்னைச் சிலிர்க்க வைத்து விட்டன.
சின்னசேலம் கோ. பாபு

● ''வையவனின்'' எழுத்தோட்டம் வேகமா, கதையின் போக்கு வேகமா? என்கிற வகையில் ஒன்றோடு ஒன்று இணைந்து மிகவும் விறுவிறுப்பாக 24 வாரங்களைக் கடந்து விட்டது. 'ஜங்ஷனில் ஒரு மேம்பாலம்.'
பெங்களூர் நாக. ஜெயமைந்தன்.

● ரெண்டியும் ஒரு மனிதனே என்பதைக் காட்டி விட்டார் ''வையவன்.''
செங்கல்பட்டு
எஸ். முத்தையப்பன்.

● 'உலா வர ஓர் உலகம்' பயணத்தில் நாங்களும் ஜாலியாகக் கலந்து கொண்டு போய் வந்த சுக அனுபவம் ஏற்பட்டது.
குடியாத்தம்
கே.கே. ராமகிருஷ்ணன்.

## ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்



## அகிலம் பரவிய சைவ சித்தாந்தம்



○ தருமை ஆதீனத் தலைவர் குருஞான சம்பந்தர்

முதன் முதலாகத் தருமை ஆதீனத்தில் அனைத்துலக சைவ சித்தாந்த கருத்தரங்கம் நடக்கப் போகிறது.

இதில் பங்கு கொள்ளத் தமிழகத் தத்துவ அறிஞர்களோடு அமெரிக்கா, பிரிட்டன், மலேசியா, கனடா, இலங்கை முதலான நாடுகளிலிருந்து தத்துவ அறிஞர்கள் 50 பேர்களுக்கு மேல் வருகிறார்கள்.

பார்வையாளர்களாக வர விரும்புவோர், ஏப்ரல் 30–க்குள் ரூ. 30 கட்டணம் செலுத்திப் பதிவு செய்து கொள்ள வேண்டும். விலாசம்: தருமபுரம், 609 001

கருத்தரங்கை தருமையாதீனமும் பாரதிதாசன் பல்கலைக் கழகமும் இணைந்து மே 11, 12, 13–ல் நடத்துகின்றன.



## ஒரு புதிய அழைப்பு

### நா. காமராசன்

# நான் ஏன் எழுதுகிறேன்?

மெழுகுவர்த்தி முற்றிலும் எரிந்து தீர்ந்து போய்விட்டது. என் கண்கள் மங்கலாய் இருக்கின்றன. அன்பிற்கினிய உங்களிடம் எனது செய்திகள் சேரும் வரை — பரபரக்கும் என் உள்ளத்தில் அமைதியைக் காண முடியாது.

வாழ்க்கையில் — கடந்த காலத்திற்கு வேலி கட்டிவிட்டு, ஒரு புதிய திசையைச் சுட்டிக்காட்டும் சில வினாடிகள் இருக்கின்றன. அந்த இடைநிலைக் காலத்தில், உள்ளத்தின் கழுகுக் கண்களைக் கொண்டு, கடந்த காலத்தையும் நிகழ் காலத்தையும் ஆராய்ந்து பார்க்க வேண்டும். உலக சரித்திரம் கூட இப்படிப்பட்ட ஒரு சுயவிமர்சனத்தையும் — நிகழ்ச்சிகள் பற்றிய மறுசிந்தனைகளையும் விரும்புகிறது. உலகம் இத்தகைய சூழ்நிலையில் பின்னோக்கிச்செல்வதைப் போலவோ, நகர மறுப்பதைப் போலவோ தோற்றம் காட்டும். ஆனால் அது உண்மையல்ல. அப்பொழுது அது சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு தனது எண்ணங்களுக்கும், செயல்களுக்கும் அறிவார்ந்த விளக்கங்களைப் பெறவே முயல்கிறது.

அந்த நேரத்தில் இலக்கியவாதி கவிதை மழை பொழியத் தொடங்கி விடுகிறான். ஏனென்றால் ஒவ்வொரு உருமாற்றமும் தெளிவில்லாத (ஆனால்) ஒளிமயமான வண்ணங்களைப் பற்றி இசைபாடும் ஒரு பெருங்கவிதையின் முதல் வார்த்தையாகவோ அல்லது கடைசிப் பாடலாகவோ தான் இருக்க முடியும். கவிகள் உலகத்தின் கடந்த கால அனுபவங்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்புகிறார்கள்.

தீர்ப்பளிப்பவர்களில் மென்மையானவர்களும், மனப்பூர்வமான இரக்கமுடையவர்களும். தமது இளம் வெப்பத்தால் சமூக முயற்சிகளின் கருவையெல்லாம் சூடேற்றும் சூரியனும் அவர்கள்தானே! மனம் செய்யும் தவறுகளையும், சந்தர்ப்பங்கள் உருவாக்கும் தீமைகளையும் தீயநெஞ்சங்களின் குறை கூறல்களையும் தவிர்த்து வாழ்க்கைச் சோலையை வசந்தமயமாக்குபவர்கள் அந்த இலக்கியவாதிகள் அல்லவா? நம்மைச் சூழ்ந்துள்ள கருமேகங்கள் சிதறி ஓடவும் — நமது துயரங்களைச் சேர்ந்து அனுபவிக்கவும், நம்மோடு வெம்பி அழவும், பிறந்த அவர்கள்... ஆழங்காண முடியாத அன்பை வெளியிட முடியாமல் தவிக்கிறார்கள். அவர்களை எனது நெஞ்சோடு அணைத்துக் கொண்டு — என் உள்ளத்தில் உள்ளதை எல்லாம் உங்களிடம் சொல்லி விடவே இப்போது நான் எழுதிக் கொண்டிருக்கிறேன்.



---

மெல்லிய தலைமுடியை நீள்வாட்டில் 25 பகுதிகளாகப் பிரித்து உலகசாதனை ஏற்படுத்தியுள்ளார் நஞ்சப்பா எனும் பொறியாளர். இவர் இதற்கு முன் ஓர் அரிசியில் 4,160 எழுத்துக்கள் பொறித்துச் சாதனை நிகழ்த்தியவர்.

-ஷோபா ஆனந்த்.



---



## வட்ட மேஜை

● ''வங்கத் தோட்டத்தில் தமிழ் தென்றல்'' என்று தலைப்புத் தந்திருக்கிறீர்களே, த்– ஒற்று எங்கே போயிற்று? அதோடு ஓசை நயமும் போய்விட்டதே!

மேலும் நேராகக் கண்டவன் என்ற முறையில் கூறுகிறேன். அதிகமான ஈர்ப்புக்கு உள்ளானவர்கள் அனுராதா ரமணனும், புஷ்பா தங்கதுரையும்தான் என்ற கூற்று ஏற்றுக் கொள்ளத் தக்கதாயில்லை. வேறுபல எழுத்தாளர்கள் மீதும் அணுக்க அன்பைப் பொழிந்தார்கள் கல்கத்தா தமிழர்கள்.

இராஜபாளையம், குன்றக்குடி பெரியபெருமாள்

[கட்டுரையாளர் சுரேஷ், பாலா தங்கள் கருத்தில் உறுதியாக இருப்பதாகக் கூறுகிறார்கள். -ஆர்]

● காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் பொன்விழாவை முன்னிட்டு தமிழகத்தில் உள்ள பள்ளிகள், கல்லூரி மாணவ, மாணவியருக்கு அறநூல்கள் ஒப்பித்தல் போட்டி நடைபெறவிருக்கிறது. விவரங்களுக்கு இந்து சமய மன்றம், 1, சாலைத்தெரு, காஞ்சிபுரம்–631 502 என்னும் முகவரிக்கு எழுதலாம்.

காஞ்சீபுரம், காரியதரிசி.

● பாலசரஸ்வதிக்கு அஞ்சலி கட்டுரையில் அவரை ஊக்குவித்தவர்களுள் ஒருவராக ஈ. கிருஷ்ணய்யரைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள்



மறுக்க முடியாத கருத்தைக் ' தையாக வெகு அழகாக வடித்திருந்தார்.

மதுரை, சி. எல். ரவிச்சந்திரன்.

● 'மறைமலை நகர் மர்மங்கள்' பற்றிய ஆய்வு பொது மக்களுக்குப் பல உண்மைகளை உணர்த்தியதோடு, இனிமேலும் பலர் ஏமாறுமல் இருக்கும்படியான அறிவுரைப் பெட்டகமாகவும் அமைந்து விட்டது.

கிருஷ்ணகிரி, ஆர். பூபாலன்.

● சிறிய உபாதைகளுக்குச் சிக்கனமான ஆலோசனை கூறியிருந்தீர்கள். நன்றி.

பெங்களுர்–16, டால்ரிக்ஸ்.

● 'பட்டப் பகலில் பலியாகிறார்கள்' என்ற செய்தி கேட்டு மனம் பதைபதைக்கிறது. கண்ணெதிரே குற்றவாளிகள் இருந்தும்

# நேர்மையில் நெருப்பாய் நின்றவர்

இது தவறு என்பதாக பாலா குடும்பத்தைச் சேர்ந்த சங்கரன் 11.3.84 இதழில் எழுதியுள்ளார். பாலாவின் முன்னேற்றத்துக்கு எனது தந்தை ஈ. கிருஷ்ணய்யரும் உதவியுள்ளார் என்பதற்கு கிருஷ்ணய்யரின் விமர்சனக் கட்டுரைகளிலிருந்து மட்டுமின்றி கலை உலகைச் சேர்ந்த வேறு பலரின்கட்டுரைகளிலிருந்தும் பல சான்றுகளை எடுத்துக் காட்ட முடியும்.

பம்பாய் கே. சீதாராமன்.

● கடந்த ஆறு மாதங்களாக சிலபலவற்றோடு எங்களுடன் கலந்து பேசி உறவாடி மகிழ்வித்ததோடு இறுதியில் நன்றியும் சொல்கிறீரேசோமு! அவருக்கு நாங்களல்லவா நன்றி சொல்ல வேண்டும்?

சென்னை–14, ஐயாறு எஸ். வாசுதேவன்.

● சந்தோஷ் கோப்பை நட்சத்திரங்களை அறிமுகப்படுத்தியது போதாது என்று, 'ஒலிம்பிக்ஸ்' குறித்தும் விவரமாக எழுதியிருக்கிறீர்களே!

சென்னை–35, சி. பூபால் சிங்.

● மாணவர் பக்கத்தில் இடம்பெற்ற மீராபாயின் 'நேசம் மரிப்பதில்லை'யில்

பார்த்துக் கொண்டு நிற்கும் அரசு பரிதாபத்துக்குரியது.

சென்னை–5, எஸ். சம்பத்குமார்.

● 'ஜெத்மலானியின் வெற்றி' தலையங்கத்தில் அரசியல் நேர்மையில் 'நெருப்பாக விளங்கிய ராஜாஜி ஒரு சமயம் சொன்ன விஷயம்' படித்ததும் பின்வரும் நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது:

இரண்டுமுறை நாடாளுமன்ற உறுப்பினராக காங்கிரஸ் சார்பில் தேர்ந்தெடுக்கப் பெற்ற வி. ஆர். நரசிம்மன் மூன்றும் முறையாக காங்கிரஸ் சார்பில் அதே கிருஷ்ணகிரி தொகுதியில் போட்டியிட்டார். அவரை எதிர்த்து ராஜாராம் (இன்று தமிழக சட்டப் பேரவைத் தலைவர்) தி. மு. க. வேட்பாளராகப் போட்டியிட்டார். அச்சமயம் ராஜாஜி காங்கிரசைத் தீவிரமாக எதிர்த்து வந்தார். பத்திரிகை நிருபர்கள் 'கிருஷ்ணகிரியில் தங்கள் புதல்வர் காங்கிரஸ் சார்பில் நிற்கிறாரே. தங்கள் நிலையென்ன?' எனக் கேட்டார்கள். பட்டென்று பதிலளித்தார் ராஜாஜி: 'அரசியலில் தகப்பனென்றும், பிள்ளையென்றும் இடையாது. நான் விரும்புவது காங்கிரஸ் தோற்கவேண்டும் என்பதே!

தஞ்சை, காந்திஆசிரமம் கிருஷ்ணன்.

(கடைசிக்கடிதம் பரிசு பெறுகிறது)

# ரயிலுள்ளவரை ராஜேந்தர்

(''ரயிலுள்ள வரை ராஜேந்தர்'' என்ற திரைப்படத்தின் துவக்க விழா பூஜை முடிந்ததும் நிருபர் ராஜேந்தரைப் பேட்டிக் காண்கிறார்.)

நிருபர்: 'ரயிலுள்ள வரை ராஜேந்தர்'னு புதுமையா பேரு வச்சிருக்கீங்களே, உங்க கதையா?

ராஜேந்தர்: இல்லே. படிக்கறப்போ மாயவரத்திலேர்ந்து சிதம்பரத்துக்குப் போகும் போது நான் ரயில்லே சந்திச்ச குயிலோட உயில்தான் இந்தக் கதை.

நிரு: பரவாயில்லையே தேவர் பிலிம்ஸ்கூட இதுவரைக்கும் குயிலை வெச்சுப்படமெடுக்கலே. ஆனா ஒரு சந்தேகம், குயில் எப்படிங்க உயில் எழுதும்?

ராஜே: சொல்றதுக்குள்ளே அவசரப்படறீங்களே. குயில்னு பறவையில்லே. காதல் ஜோடி. ரயில்லே சந்திக்கறாங்க. அப்போ ரெண்டு மூணு மோதல். மோதல் கனிஞ்சு காதல். ரெண்டு பேரும் ஜாலியா டுயட் பாடறாங்க.

'வயலெட் சேலை கட்டி
வயலோரம் போற பெண்ணே இந்த
வயல் விளைஞ்ச பிறகு உனக்கு
வைரக்கம்மல் வாங்கித் தாரேன்.''

பாட்டு எப்படிங்க?

நிரு: ஆகா பிரமாதம்.

ராஜே: இன்னங் கேளுங்க, ஹீரோயின் அம்மா அதாவது குயிலோட தாயார் எவ்வளவோ சொல்லியும் கேக்காம இவங்க காதல் தொடர்வதைப் பார்த்து அடியாட்களைக் கூப்பிட்டு ஹீரோவின் கேஸ்ப்பை நைஸ்பாய நித்துடச் சொல்றா. இங்க ஒரு சண்டை வைக்கப் போறேன். அடியாட்கள் எல்லாம் ஹீரோட்ட அடி வாங்கற ஆட்களாயிடறாங்க. ஒவ்வொரு தடவையும் அடிக்கறதுக்கு முன்னாடி ஹீரோ நிறுத்தி நிதானமாச் சொல்றான்.

''வாடா தம்பி;
வயர் கம்பி;
உன்னை நெம்பி;
நான்செய்வேன் கம்பி.''

அப்புறம் அவங்களைக் கொன்னும் போது சொல்றான்.

''ராஜேந்தர் கொன்னு
சொல்லிக்கிட்டு அன்னு.''

—இப்படி ஒரு 4 ரீலுக்கு சண்டை போட்டப்புறம் ஒரு அடியாளைக் கொன்னுட்டு ஜெயிலுக்குப் போயிடறான்.

நிரு: சண்டைல எல்லாத்தையும் வச்சுட்டு, ''இச்சு இச்சு'' மூட்டறதை மறந்துட்டீங்களே.

ராஜே: அதுவும் இருக்கு.... மீதிக்கதையைக் கேளுங்க, ஹீரோ ஜெயிலுக்குப் போன துக்கத்துல குயில் ரயில் முன்னாடி பாய்ஞ்சுடறா. குயிலைப் பாக்க ஆசையா ஜெயில்லே வர்ற ஹீரோவிடம் குயிலோட உயில், அதாவது சாகுறதுக்கு முன்னாடி எழுதிய கடிதம் தான் கிடைக்குது.

''இந்த ரயில்தான் சேர்த்தது:
அந்த ஜெயிலோ பிரித்தது:
ரயிலுள்ளவரை ராஜேந்தர்என்ஞம்



குயிலோசை கேட்கும்
ரயில்பாதை முழுதும்.''

—இப்படிக் கடைசியிலே டி. எம். எஸ். நாலு வரி பாடறாரு.

திரு: ரொம்ப 'டச்சிங்கா' முடிச்சிட்டீங்க. சரி, யாரெல்லாம் நடிக்கிறாங்க?

ராஜே: (கோபமாக) என்ன கேள்விகேட்டுட்டீங்க பேசிக்கிட்டிருப்பது. ராஜேந்தர் கிட்ட, ஞாபகம் வைச்சுக்கங்க. ஹீரோ, ஹீரோயின், வில்லன், வில்லி, காமெடியன், வில்லனோட அம்மா, ஹீரோயினோட அம்மா எல்லாமே நான்தான். இந்தப் படத்துல மட்டுமில்லே. என்னோட அடுத்த படங்களான 'ரயிலுக்கோர் ராகம்', 'ரயிலைக் காத்த கொடி'ல கூட நாந்தான் எல்லாம்.

திரு: (ஆச்சரியமான சந்தேகத்துடன்) ஹீரோயின், அம்மா வேஷமெல்லாம் எப்படி?...

ராஜே: ஏன் முடியாது? நடிப்புங்கறது ஒரு கலை. அதுல பிடிப்பு இருக்கற யாருக்கும் நடிப்பு வரும். இதுல ஆண் வேஷம்னு என்ன? பெண் வேஷம்னு என்ன? ஆரம்பத்திலே சிவாஜி கூட 'சக்தி நாடக சபா'வில ஸ்திரி பார்ட்லதான் நடிச்சாரு. அப்ப யாரும் ''சிவசிவா, சீ,சீ''ன்னு சொல்லலியே? ரசிச்சாங்கல்ல? அதுமாதிரி தான் இதுவும்.

திரு: இப்படி எல்லாத்தையும் செஞ்சா ஏதாவது உருப்படியா செய்ய முடியுமா?

ராஜே: வாதம் பண்ணாதீங்க. வெஜிடபிள் சாதம் சாப்பிட்டதில்லே நீங்க? அதுல எத்தனை விதவிதமாக் காய்கறிங்க. எல்லாத்தையும் சேர்த்து ஒரே ஆள்தானே சமைக்கிறாரு? அதுவும் மசாலா, இதுவும் மசாலா. ரெண்டாவது எனக்குத் தன்னம்பிக்கை ஜாஸ்தி. அதான் என்னோட ஆஸ்தி. நீங்க என்கே ஒரே ஒரு எலி

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

''என்னது நேத்து ராத்திரி உங்க வீட்டுக்குத் திருடன் வந்துட்டுப் போனது ரொம்ப நல்லதாப்போச்சா?''

''ஆமா. என்னோட கஷ்டத்தை யெல்லாம் சொல்லி காலி பீரோவைத் திறந்து காட்டினேன். எம்மேலே இரக்கப்பட்டு நூறு ரூபா கொடுத்துட்டுப் போயிட்டான்.''

—ஜா. ரவி.



மெண்டரி ஸ்கூல் ஸயன்ஸ் புத்தகத்தோட ராக்கெட்லே ஏத்திக்கிட்டுப் போய்ச் 'சந்திரன்'ல விட்டுட்டு வந்துருங்க. நான் அந்த 'ஸயன்ஸ்' புக்கை 'ஸ்டடி' பண்ணியே ராக்கெட்டை உருவாக்கி 'ஸ்டெடி'யாக பூமிக்கு வந்துருவேன்.

திரு: எலிமெண்டரி ஸ்கூல் ஸயன்ஸ் புக் மூலமாகவே ராக்கெட்டைச் செஞ்சுருவீங்களா? ரீல் விடாதீங்க சார்!

ராஜே: ஏன் சார் முடியாது. படிக்கறப்போ என் கேர்ல் ஃப்ரெண்ட் கிழிஞ்ச சட்டையைத் தைக்கறதப் பார்த்தே எனக்கு ஒரு புதுச் சட்டையும் அவளுக்கு ஒரு ஜாக்கெட்டும் தைச்சுக் கொடுத்தவன் சார் நான். ஜாக்கெட் தைச்ச என்னால ராக்கெட்ட செய்ய முடியாதா? அந்த அனுபவத்திலதான் இந்தப் படத்தோட எடிட்டிங்கையும் நானே எடுத்திருக்கேன்.

(திருபர் மீண்டும் சந்தேகம் எழுப்ப முயல ராஜேந்தர் இடைமறித்து)

ராஜே: தையல் கலைக்கும் எடிட்டிங்குக்கும் நீங்க நிறைய ஒற்றுமையைப் பார்க்கலாம். அதுலயும் கத்திரியால வெட்டறோம். இதுலயுந்தான். அதுல வெட்டினதைச் சேர்த்துத் தைக்கறோம். இதுல வெட்டினதைச் சேர்த்து ஒட்டறோம்.

திரு: அதுசரி; உங்க படத்தைப் பார்த்து நாங்க சட்டையைக் கிழிச்சுக்கும்போது அதையும் நீங்களே தைச்சுக் கொடுப்பீங்களா?

ராஜே: (கோபமாக) இண்டலா செய்றீங்க? கின்னஸ் புக்ல என் பேரு வர்ற வரைக்கும் விட மாட்டேன்.

திரு: கின்னஸ் புக்ல இருக்கற இன்னொரு சாதனையை நீங்க செஞ்சு காட்டணும். ப்ளீஸ்.

ராஜே: (ஆவலாக) என்ன?

திரு: சாப்பிடற நேரம் போக கை, கால், வாய் எல்லாத்தையும் கட்டிக்கிட்டு ஒருத்தர் அஞ்சு வருஷம் இருந்தாராம். நீங்க தயவு செய்து இந்தரெகார்டை....

(ராஜேந்தர் அடிக்கவர திருபர் ஓடுகிறார்.)

பின்பு, சில நாட்களுக்குப் பிறகு ராஜேந்தர் ஓர் அறிக்கை விடுகிறார்.

''என் அன்பிற்கும் அபிமானத்திற்கும் உரிய ரசிகர்களே, நான், திரைப்படத்தில் பல பொறுப்புக்களையும் ஏற்றுத் திறம்படச் செய்வதுபொறுக்காத பொறாமை பிடித்த வஞ்சகர்கள் வக்ரத்தனமாக என் மனமென்னும் மலரைக் காயப்படுத்தி வருகின்றனர். நான் அவர்களுக்கு அறைகூவுவது எல்லாம் நீங்களும் என்னைப் போல எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்று வசூல் ரீதியில் படத்தை வெற்றி பெறச் செய்த பிறகுதான் உங்கள் கண்டனங்களுக்கு நான் பதில் சொல்வேன். என் படத்தை வெற்றிபெறச் செய்யும் நீதிபதிகளாகிய ரசிகர்களே! உங்களுக்கு என் அனுதாபம் ஸாரி, என் அபிமானம் கலந்த வணக்கங்கள்!
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை-600 009






## வாழ்த்துச் செய்தி

சரித்திர நிகழ்ச்சிகளை நிலைக்களனாகக் கொண்டு, கற்பனையாக சில பாத்திரங்களையும், சம்பவங்களையும் உருவாக்கி எழுதப்படும் புதினங்களுக்கு மக்களிடையே பெருத்த வரவேற்பை ஏற்படுத்திக் கொடுத்தவர் அமரர் கல்கி அவர்கள். அவர் எழுதிய சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன், பார்த்திபன்கனவு ஆகிய சரித்திரப் புதினங்கள், தென்னாட்டு வரலாற்றின் உண்மையான நிகழ்ச்சிகளையும், பல்லவர், சோழர், பாண்டியர், சளுக்கர் ஆகியவர்களின் காலத்தில் இருந்த சமுதாய அரசியல் நிலவரங்களையும் எடுத்துக் காட்டுவதாக இருந்தன. அமரர் கல்கி அவர்கள் தொடங்கி வைத்த அந்த மரபைப் பின்பற்றி, சரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்டு புதினங்களைப் படைத்திடும் பல எழுத்துலகச் சிற்பிகள் தற்போது புகழ்பெற்று வருவது பாராட்டத் தக்க ஒன்றாகும்.

சரித்திரப் புதினங்களைப் படைத்திட விரும்பிடுவோருக்கு வரலாற்று அறிவும், ஆராய்ச்சித் திறனும், இலக்கியப் புலமையும் இருந்திடல் வேண்டும். புதினத்தைப் படைப்பதற்காகத் தேர்ந்து எடுத்துக் கொள்ளும் காலத்தில் நிலவிய சமூக சூழ்நிலை, கலாச்சாரச் செழிப்பு, பழக்கவழக்கங்கள், இவை பற்றிய செய்திகள் தெரிந்திருக்க வேண்டும். இவை அனைத்தோடு காதல், வீரம், போர்க்களத் தந்திரங்கள், இவற்றைப் பொருத்தமாகவும் அளவோடும் கையாளத் தெரிந்திருக்க வேண்டும். அனைத்துக்கும் மேலாக வாசகர்கள மனத்தில் ஆவலைத் தூண்டுகிற வகையில் கதையை ஒழுங்கு படுத்துவதோடு, நடையில் ஒரு கம்பீரமும், சுவையும் கையாளப்பட வேண்டும்.

இத்தனை அம்சங்களும் கொண்டதாகச் சரித்திரப் புதினங்களை அமைத்தால் அவை வாசகர் வரவேற்பைப் பெறுவதுடன் அவர்கள் உள்ளத்தில் நிலையான இடத்தையும் பெறும்.

எனது அருமை உடன்பிறப்பு டாக்டர் கோவி. மணிசேகரன் அவர்கள், நான் மேலே தொகுத்துக் கூறிய தகுதிகள் பலவற்றையும் நிரம்பப் பெற்றுப் பல்வேறு சரித்திரப் புதினங்களைப் படைத்துத் தமிழக வாசகர் உள்ளத்தில் சிறப்பானதோர் இடத்தைப் பெற்றிருப்பவர்.

டாக்டர் கோவி. மணிசேகரன் அவர்களுக்கு உற்சாகமூட்டத்தக்க வகையில் தமிழக வாசகர்களின் பேராதரவு அவருக்குக் கிட்டிட வேண்டும் என்று எனது இனிய நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவரது வெற்றி தமிழுக்கும் தமிழர்களது வாழ்வுக்கும் ஏற்றந்தரும் வெற்றியாகும். இந்த வெற்றியைத் தமிழ்மக்கள் இவருக்கு நிச்சயம் அளிப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

அண்ணா நாமம் வாழ்க!

(எம். ஜி. இராமச்சந்திரன்)
முதலமைச்சர்



(அண்மையில் வெளியான
ஒரு நாவலின் வாழ்த்துரையிலிருந்து)

**கோவி மணிசேகரன்**
**வேங்கைவனம்**
**அடுத்த இதழில் ஆரம்பம்.**



அஞ்சலி

# கனமான பஞ்சு!

**இரட்டை இயக்குனரில் ஒருவர் — பஞ்சு — மறைந்து விட்டார். ஏ. வி. எம். நிறுவனத்துக்காக முப்பது படங்களுக்கு மேல் இயக்கியவர்கள் கிருஷ்ணன் — பஞ்சு. திரு பஞ்சு பற்றி ஏ. வி. எம். சரவணன் கூறுகிறார்:**



திரு. பஞ்சு

**இயக்குனர் பஞ்சு:**

திரைப்பட எடிட்டராகத் தொழிலுக்கு வந்தவர் படிப்படியாக இயக்குனர் ஆனார். அவர் புகழின் உச்சியை அடையக் காரணமாய் இருந்தது பராசக்தி திரைப்படம். சிவாஜியைத் தான் கதாநாயகனாகப் போட வேண்டும் என்று தயாரிப்பாளரிடம் பிடிவாதம் காட்டி வெற்றி பெற்றார். சிவாஜியைத் தொடர்ந்து எஸ். எஸ். ஆர். எம். ஆர். ராதா, தர்மேந்திரா ஆகியோரை அறிமுகப்படுத்தியதும் பஞ்சு தான். எங்கள் நிறுவனத்துக்கென அவர் இயக்கிய பல வெற்றிப் படங்களுள் பெரிய சாதனைசளைப் புரிந்தவை தமிழில் ''அனுதை ஆனந்தன்'' இந்தியில் ''மே சுந்தர் ஹூன்.''

ரத்தக் கண்ணீரில் எம். ஆர். ராதாவைத் துணிந்து கதாநாயகனாக நடிக்க வைத்தது இவர் திறமைக்கு மற்றொரு சான்று. யாருக்கும் எளிதில் படிப்படாத முரட்டு சுபாவமுடைய எம். ஆர். ராதாவுக்குப் பஞ்சு என்றால் பயம் உண்டு. புதிராக விளங்கிய எம். ஆர். ராதாவை எல்லோரும் புரிந்து கொள்ளும் படி செய்தவர் பஞ்சுதான்.

இவர் இயக்கிய படங்களுக்கெல்லாம் இவரே தான் எடிட்டர். ஆனால் டைட்டிலில் ''பஞ்சாபி'' என்று தான் போட்டுக் கொள்வார். செட்டுக்கு வருமுன்னரே எடுக்கவேண்டிய காட்சிகளைக் கிருஷ்ணனிடம் கலந்து பேசி எழுதிக் கொண்டு வந்து விடுவார்.

**மனிதர் பஞ்சு:** ''எட்டுமுழ வேட்டி கட்டிச் சட்டைப் பித்தான்களைப் போடாத இயக்குனர்'' என்றால், உடனே ''பஞ்சுதானே.'' என்ற கேள்வி பிறக்கும். தேனி மாதிரி மகா சுறுசுறுப்பு. ரொம்ப கோபக்காரர். ஆனால் அடுத்த நொடியில் வந்த கோபம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும். இந்தி, ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய நாலு மொழிகளும் நன்கு அறிந்தவர். உழைப்பே மூச்சாக இருந்தவர். சாப்பிடவும் மறந்து போவார். வற்புறுத்தி அழைத்துப் போக வேண்டும். கடவுள் பக்தி உண்டென்றாலும் வெளிக் காட்டிக் கொள்ள மாட்டார். கலப்புத் திருமணத்தை ஆதரித்தவர். கிருஷ்ணனின் சகோதரி சரோஜாவை மணந்தார்.

**நண்பர் பஞ்சு:**

பஞ்சு அதிகம் சிகரெட் பிடிப்பவர். சிகரெட் பழக்கம்தான். எடிட்டர்பஞ்சுவும் பிரிமியர் சினிடோன் லாபரட்டரியில் வேலை பார்த்து வந்த கிருஷ்ணனும் இணையக் காரணமாய் இருந்தது. இந்த நட்புக்கு வயது நாற்பது. இறுதிவரை பிரியாதிருந்த இந்த ஜோடி போல் வேறு ஒரு ஜதையைக் கூற முடியாது. 'நாங்கள்' என்றே குறிப்பிடுவார்கள். 'நான்' என்று கிருஷ்ணனோ, பஞ்சுவோ கூறி யாரும் கேட்டதில்லை. இவர்களுடைய ஒவ்வொரு படமும் சமுதாய நோக்கில் ஒரு ஆழமான கருத்தை வலியுறுத்தும். உதாரணம் குல தெய்வம் - விதவாவிவாகம்; சர்வர் சுந்தரம் — குடும்ப நலத் திட்டம்; பராசக்தி— சமூக சீர்திருத்தம்.

பேட்டி: **சிக்கி**

✕ பராசக்தி செட்டில் இடமிருந்து பஞ்சு, சிவாஜி, கிருஷ்ணன் காமிராமேன் மாருதிராவ்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

## ராலி:பேன் டீலக்ஸ்




## ஏனெனில் ஒரு டேபிள் :பேன் ஆயுட்காலம் வரை உழைத்துக் கொண்டே இருக்கவேண்டும்

ராலி:பேன் டீலக்ஸ். ஓசையற்றது. ஒயிலானது. உறுதியானது. புஷ் பட்டன் ரெகுலேட்டர் ஸ்விட்ச்கள் கொண்டது. தேர்ந்தெடுக்க கனவுக் கவர்ச்சியான ஐந்து வண்ணங்கள்: ப்ரெஷியன் ப்ளூ, செர்ரி ப்ளாசம், லெமன் க்ரீன், ராலீ ப்ளூ, ஆரஞ்ச். ராலி:பேன் டீலக்ஸ்—விவேகமான தேர்வு.

**ராலி:பேன்**

தரமோங்கிய தயாரிப்புகளுக்கு  **ராலீஸ்**

ULKA-RFDX-1-84 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# அழகிய பாரம்பரியம்



எழிலை வெளிப்படுத்தும் இளஞ்சாயல்கள்,
எடுப்பான நெசவுகள், மனங்கவரும் டிசைன்கள்.

அழகிய ஃபாஷன் விரும்பிகளுக்கு அழகிய
கிராவியரா சூட்டிங்ஸ்

GRAVIERA SUITING GR®